# "ஒற்றுமை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்."—திருக்குறள்.

புஸ்தகம் V Vol. V | 1925ஞ மார்ச்மீ | சஞ்சிகை 5 Issue 5

## அருள்முருகாற்று.

அருளா லுகந் தமர்ந் தினிதிருக்குந்
தெருளார் பருவத் திரியம்பிகை செல்வா
கங்கை மைந்தா கார்த்திகை சிறுவா
மங்கை பங்கர் வழிபடு தேசிகா
வண்ண மரகத வாழ்மயில் வாகன
கண்ணன் மருகா கணபதி சகோதரா
வமையாக் கருணை யம்பிகை புதல்வா
இமையாத் தெய்வயானைக் கிறைவா
வரிசிலை மறவர் தருகுறச் சிறுமி
பரிபுர கமல பாத சேகரா
தென்பரங் குன்றினுஞ் சீரலைவாயினு
மன்பர் நெஞ்சத்தினு மாவினன் குடியினும்
அழகிய குன்று தோறாடலும் பழமுதிர்
சோலை மலையினு மாகியவாறு
தலத்தினு மடியார் மனத்தினுங் கூறுஞ்
செருத்தணிக் குன்றெனும் பதியினு

மினிது வீற்றிருக்கு மிறைவா போற்றி
யென்று மிளைய விளையாய் போற்றி
குன்றமெறிந்த கோவே போற்றி
வாரிதி மறுக மகபதி பிழைப்பச்
சூரனை முனிந்த சூரா போற்றி
யாராவமுதே யரசே போற்றி
சேனைபதியே சேயே போற்றி
வினைப்பகை யறக்கும் விமலா போற்றி
நினைத்தது முடிக்கு நிமலா போற்றி
யனைத்துள வுயிர்க்கு மாதி போற்றி
ஆதியுமந்தமு மில்லா வரசே
சோதியே ஞானச் சுடரே போற்றி
சரவணபவனே சண்முகா போற்றி
குரவணி புயனே குகனே போற்றி
வேந்தா போற்றி விசாகா போற்றி
சேந்தா போற்றி செட்டி போற்றி
கந்தா போற்றி கடம்பா போற்றி
சிந்தாமணியே செயசெய போற்றி
போற்றி போற்றி யென்றுனைப் புகழ்ந்து
சாற்றுவேன் றிருத்தாடந் தருணமக்கே.

வேலுமயிலும் விரைக்கடம்பும் பூங்காவு
நாளுமென் னெஞ்சத்தே நட்டதே—கோலக்
குறிஞ்சியார் கோவைக் குமரர் பெருமானை
யறிஞ்சியான் கைதொழுத வன்று.

அருணகிரிநாதர் அருளிய ஆறு முருகாற்றுப்படை களுளவென யாம் சிலர் சொல்லக்கேட்டுத் தேடப்புகுந்து பெற்ற பிரதிகள் மூன்று. அவற்றுள் ஒன்று கையெழுத்துப் பிரதியும் மற்றிரண்டும் பழைய ஏட்டுப் பிரதிகளுமா யிருந்தன. இம்

மூன்றையும் ஒப்புநோக்கிக் கூடியளவிற்புடஞ்செய்து எடுத்துக் கொண்டோம். இவற்றில் பிழையில்லை என்பது எமது கருத்தன்று. ஒப்புநோக்குவதற்கு வேறு பிரதிகள் கிடையாமையால் இன்னும் வழுக்களைந்து தூயதாய் பெற்றுக் கொள்வதற்கு முடியவில்லை. எவரிடமாவது எட்டுப் பிரதிகளுளவேல் அவற்றை உதவின் எமது பிரதிகளோடு நோக்கித் திருத்தஞ் செய்வதற்குதவியாகும். இது இறந்த நூலிலொன்றாகாமல் நிலவவேணுமென்று விழைந்தே வெளியிட விரைந்தோம். இது அருணகிரிநாதர் தான் அருளிச்செய்தாரோ வென்பது அனேகருக்குச் சந்தேகத்துக்கிடமா யிருக்குமென்பதில் ஐயமில்லை. இந்நூல் முகப்பிலே,

"கருமுருகாருங் குழல்வள்ளி கேள்வன் கருதவரைப்
பொரு முருகா திபனைக் காட்டெனக் கெனப்போந்து சொன்ன
அரிமருகா நிற்கன்றங்கண் ணருணகிரி யுரைத்த
திரு முருகாற்றுப் படைகொண்டவா செந்திமன்னவனே."

என்னும் ஒருபாட்டுக் காணப்படுகிறது. சம்பந்தாண்டான் பிரபுடைதேவ மகாராசாவை ஏவி கந்தமூர்த்தியைத் தமக்குக் காட்டுமாறு அருணகிரியாரைக் கேட்க அவரும் அதற்கிசைந்து கந்தமூர்த்தியை அழைத்தனர். தேவி உபாசகனாகிய சம்பந்தாண்டான் கந்தமூர்த்தி வாராதபடி தேவியை வேண்டித் தடைசெய்தகாலே இவை பாடப்பெற்றன என்று கருதற்கு இடமுண்டு. ஆறு அக்கரங்களுக்கும் அருணகிரியார் ஆறு அகவல் பாடினர் என்னும் ஓர் கதையுமுள்ளது. அருணகிரியாரருளிய மற்றைப் பாட்டுகளின் நடைக்கும் இவற்றுக்கும் வேற்றுமை பெரிதுமுளவாகலின் இவற்றை அருணகிரியாரருளிச் செய்யவில்லை எனக் கொள்ளலாமெனில், பட்டினத்தடிகள் பாட்டுகளாகப் பதினோராந் திருமுறையிற் காணப்படுவன. வற்றிற்கும் ஏனைய அவர் பாட்டுகளுக்கும் வேறுபாடு பெரிதுங் காணப்படுதலின்

அவற்றை அவர் பாக்களெனக் கழித்துவிடல் கூடாவாறுபோல பாட்டு நடையைக்கொண்டு அவர் செய்யவில்லையென கூறுதல் சாலாது. இவ்வகவற்பாவின் ஒவ்வொன்றினி றுதியிலும் யந்திரங்களும் அவற்றுக்குரிய மந்திரங்களும் காணப்படுகின்றன. இவை மந்திரங்களாக உபயோகிக்கப்பட்டு வந்தனவென்று விளங்குகிறது. யாம் அறிந்த உண்மைகளை வெளியிட்டேம். இன்னும் இதனுண்மைகள் வேறுவகையாயுளவேல் அதனையும் பெரியோர் வெளியிடுதல் நன்று.

ந. சி. கந்தையா, கந்தரோடை.

# நம்பிக்கை *

(Faith)

நாம் எளிதில் தெரிந்து கொள்ளக் கூடாததைச் சரியென ஒப்புக்கொள்வது நம்பிக்கையெனப்பொருள்படாது. நமது அறிவை அர்ப்பணஞ் செய்வது நம்பிக்கையல்ல. நம்பிக்கை யென்னவெனில் நாம் பிரமாணத்துடன் எடுத்துக் காட்டி விளக்கமுடியாதவற்றை பிரபஞ்சத்தில், நமக்கு உண்மைகள் எனத் தெள்ளிதில் தெரியக்கிடக்கும் விஷயங்களை விட நுண்ணிய உண்மை யெனக்கொள்ளும் ஓர் மனோநிகழ்ச்சியே. மேலும், அத்துடன் ஓர் உணர்ச்சி யளவில் நில்லாது, அவ்வண்ணமே நாம் வாழ்க்கையில் நடித்துக் காட்டுவதே உண்மையான நம்பிக்கையாகும்.

"ஒரு தடித்த சட்டை குளிருக்கேற்றது," என நீ ஒரு பையனிடஞ் சொல்வதாக அநுமானித்துக்கொள்.

* Children's Encyclopaedia வில் உள்ள வியாஸத்தைத் தழுவி எழுதப்பெற்றது.

"ஆம், அதுசரியே. அதில் எனக்கு நம்பிக்கையுண்டு" என அவன் உனக்குப்பதில் தருகின்ருன். எனினும் கடுக்குங் கடுங்குளிர் தோன்றிய ஓர்தினம் அவன் ஒருவித சட்டையுமின்றி வெட வெடவென நடுங்கி ஒடுங்கினுல், தன் நம்பிக்கையைப் பின்பற்றி அவன் நடக்கவில்லை யெனத் தெள்ளிதின் தெரிகின்றது.

தன்னலங் கருதாது, வறுமை நோயினுல் வருந்துபவருக்கும் துயரத்தினுல் சோர்வுறுபவருக்கும் நம்மாலான உதவியையும் தேறுதலையும் அளித்து ஆற்றலுறும்படி செய்ய வேண்டியதே நமது கடன் என்ற உறுதிப்பாட்டோடு, நமது சொகுசான செல்வச் சீர்நலங்களைக் கைவிட்டு நோயாளிகளினிடையில் நமது வாழ் நாட்களைக் கழித்து அவர்களை மேம்படுத்தும் தொழிலிலே ஈடுபட்டிருப்பின், நம்பிக்கையின் கதியையே பின்பற்றி நடக்கும் ஆற்றலை யுடையவராதலால் நாம் உண்மையான நம்பிக்கையை யுடையவர் என நம்மை உலகம் கூறும். இந்தியா ஈடேறவேண்டின் தாழ்ந்தவரையும் உயர்த்தல் அவசியம் என்ற உண்மை நம்பிக்கையோடு கூடிக் கீழ்மக்கள் எனக் கூறப்படும் யாவரும் நல்வழிப் படுமாறுத் தீண்டாமை விலக்கு முதலிய துறைகளில் முயல்பவரில் நமது பாரத மாதாவின் சற்புத்திரர் காந்திமகான் ஒருவரல்லரோ! கடந்த நூற்ருண்டினிறுதியில் நடந்தேறிய கிரிமியாயுத்தத்தில் அரும்பாடுபட்ட பிளாரன்ஸ் நைட்டிங்கேல் அவ்வர்க்கத்தினளல்லவோ! இன்னும், தனது தேசம் தன்னுட்சி பெற்று ஈடேறுதலையே தனது மதக்கொள்கை யென உறுதியாகக் கொண்டு தனது அரிய உயிரையே பட்டினி விரதத்தின் முடிவாகத் தியாகஞ் செய்தவர் அயர்லாந்தின் முதன் மகன் மாக்ஸ்வைனியல்லரோ ! ராசீய விஷயங்களில்

நாம் எத்தகைய அபிப்பிராயங்கொண்டு வேறுபடினும், அவாது தெய்வபக்தியையும், தனது அறிவிற்கேற்ப தேச சேவையே செய்வதெனத் தேர்ந்து ஒரு மனத்தோடு ஊழியஞ் செய்து, திக்கற்றவருக்குத் தெய்வமே துணை யென்ற உறுதிப் பாட்டைக்கொண்டுத் தன்னைப் பரிபவப் படுத்திய வக்காலத்தில் 'கோவிந்தா' எனக் கதறிக்கூவியல றிய திரௌபதியைப்போன்று தனது ஆத்மாவும் கூவி யலறியதன் முடிவாகப் பட்டினி விரதத்தைப் பூண்டு, தற் போது வட இந்தியாவில் நிகழும் ஹிந்து முஸ்லீம் சச்சரவு களைத் தீர்த்து ஒற்றுமைப் பாட்டை யேற்படுத்த எண்ணி யிருக்கிற மகாத்மாகாந்தியின் நம்பிக்கையின் நேர்மை யென்னே!

ஆகவே, நம்பிக்கைக்கு அடிப் படையாக உள்ளது நடக்கையே. நம்புதல் மட்டும் இருந்தால் போதாது. நம் பிக்கையின்படி நடக்கும் ஆற்றலே அந்நம்பிக்கைக்கு அரிய பூஷணமாகும்.

வாழ்க்கையில் நாம் உண்மையென நிரூபிக்கவல்ல விஷ யங்கள் சிலமட்டும் உள்ளன. நாம் நிரூபிக்க வொண்ணுத படி நமது அறிவைமயக்கும் விஷயங்கள் பலகோடி உள் ளன. பின்னவைகளிலேயே நமது நம்பிக்கை ஒரு அரிய பெரிய ஆற்றலாயிருக்கின்றது.

தனது தாய் தன்னிடம் மிகுந்த வாத்ஸல்யத்தைக் காட்டுகிருள் என்றதை எக்குழந்தையும் அதை நம்பாத ஒருவரிடம் நிரூபிக்க வொண்ணுகது. "உன் தாய் தன் னலங்கருதியே உன்னை நேசிக்கிருள். அவளுக்கு அதனுல் ஒருவித அரிய பெரிய இன்பம் நிகழாதிருந்தால் அவ்வண் ணம் உன்னை நேசிக்க மாட்டாள். ஆகவே, அவள் நேசிப்பது உன்னையல்ல, தன்னையே" என, தாய் குழந்தையாகிய இரு

வர் பரஸ்பரம் கொள்ளும் அன்பின் சிறப்பை யறியாத ஒருவர் சொல்லலாம். எனினும் தன்னிடம் தன் தாய் காட்டும் அன்புத்திறம் உண்மையானதே என்ற முழுநம்பிக்கையோடே, குழந்தை தன் தாயினிடம் நடந்துகொண்டு தனது வாழ்க்கையை இனிமையாக்கிக் கொள்ளுகின்றது. ஆகவே, அக்குழந்தையின் வாழ்க்கைச் சுகிர்தம் அதன் நம்பிக்கையாலேயே ஆகின்றது.

இன்னும், சாமான்கள் செய்துவிற்றுவரும் ஒருவன் தன்னிடம் வழக்கமாய் வாங்கியேகும் வர்த்தகனிடமும், பின்னவன் தன்னிடம் லேவாதேவி செய்யும் பொது ஜனங்களிடமும் நம்பிக்கையினுலேயே தமது தொழிலை நடத்துகின்றார்கள்.

ஆகவே, நாகரிகமான வாழ்வெல்லாம் நம்பிக்கையின்பாற்பட்டது. நெற்றி வியர்வை நிலத்தில் விழச் செய்யும் நமது உத்தியோகத்திற்காகக் கிடைக்கும் நமது சம்பளம் ஒரு தாசும் பெறுதகாகிதம். அதை வெளியிட்ட கவர்ன்மெண்டினிடத்தில் நாம் வைத்திருக்கும் நம்பிக்கையினுலேயே அதை நாம் நன்கு மதித்து நமது பெரும் உழைப்பிற்குப் பிரதியாகப் பெறுகின்றோம். பின்பு, அதில் உள்ள நம்பிக்கையினுலேயே நமது கடைக்காரனும் பெற்று நமக்கு வேண்டிய உணவுப்பொருள்களைத் தருகின்றான். நாம் பெறும் உணவுப்பொருள்கள் நல்லவைகளே, விஷங்கலந்தவைகளல்ல என்ற நம்பிக்கையோடே நாமும் அவைகளை வாங்கிச் சென்று உண்டு வாழ்கின்றோம்.

நம்பிக்கையின்றி நாம் வாழ்வது கஷ்டசாத்தியம். பரஸ்பரம் சந்தேகம் மிகுந்தால் மிருக வாழ்க்கையையே நாம் வாழவேண்டியிருக்கும். நம்பிக்கையின்றேல் அன்பில்லை. அன்பின்றேல் சமாதானமில்லை. சமாதானமின்

றேல் சச்சரவும் சிக்கலும் மிகும். நம்பிக்கையுண்டென்றால் அன்பும் சமாதானமும் கூட்டுறவும் இயக்கமும் இருத்தல் இயலும். நமக்கிடையிலுள்ள நஷ்ட ஈடு கம்பனிகளும், பாங்கிகளும், பண்டக சாலைகளும் இன்னும் பிறவும் நம்பிக்கைஸ்தாபனங்களே. நாகரிகமான உயர்ந்த இனிய வாழ்க்கை நாம் ஒருவருக்கொருவர் கொண்டிருக்கும் நம்பிக்கையினாலும், நாம் எல்லோரும் சேர்ந்து நமது ராஜாங்கததாரிடம் காட்டும் நம்பிக்கையினாலும், பின்பு பல ராஜாங்கத்தார்களும் தேசத்தார்களும் ஒருவருக்கொருவர் காட்டும் நம்பிக்கையினாலும் ஆயது. நம்பிக்கைத் துரோகம் ஏற்படில் கடும்போர் விளையும். 'உடன் படிக்கைகள் எல்லாம் காகிதத்துண்டுகள்தாமே' என்ற ஜர்மானியரது மனப்பாங்கின் முடிவு எத்தகைய உயிர்ச்சேதத்தையும் பொருட்சேதத்தையும் விளைவித்து நாகரிகத்தையும் பின்னிடச் செய்ததென்பது யாவரும் அறிந்ததே.

உலகத்துத் தற்போதைய ராசிய நிலைமை நமது விஷயத்திற்கு ஏற்ற திருட்டாந்தமாக இருக்கின்றது. சமாதானங் குடிகொள்ள வேண்டுமெனப் பரிந்து பேசும் பலருமிருக்க அவரிடையில் ஸ்பெயினைச் சேர்ந்த மொராக்கோவில் சண்டைகள் நிகழ்வதும், ருஷியாவைச் சேர்ந்த ஜியார்ஜியாவில் ஆரவமும் அமிளிகுமிளியும் நிறைந்து கிடப்பதும் போர் நஷ்டஈடுபெற்றிச் செய்யப்பட்ட உடன்படிக்கைகள் வகையில் காட்டிய உடன்பாடு ஒற்றுமைகளை ஒருபுறம் இருத்திப் பிரெஞ்சுக்காரர் ஜர்மானியரிடம் இயல்பாகக் காட்டும் மனக்கிலேசமும் கொடுமையும், அமெரிக்கா தேசத்தவர் ஜப்பானியரைத் தமது தேசத்தினின்றும் விலக்கிய விலக்குச்சட்டமும், கினியா, டங்கனைக்கா, தென் ஆபிரிக்கா முதலிய இடங்களில் இந்தியரைத் தனிப்படுத்தச் செய்த

சட்ட திட்டங்களும், இன்னும் பிறவாகியபலவும் நம்பிக்கை சூன்யத்தினாலும் அன்பு ஆதரவின்மையினாலும் நிகழ்ந் தவையே. ஆகவே, மனிதர்களுடைய இல்லற சங்க சமூகங் களுக்கு மட்டல்லாது பல தேசத்தவர்களுக்கும் நம்பிக் கையே வாழ்வென்ற பெருங்கடலை நீந்தி உய்ய உதவும் இரும்புணையாகிய அருந்துணையாயிருக்கின்றது.

பிரபஞ்சம் இயந்திரத்தைப்போன்று அறிவு லக்ஷியங் களின்றி நிற்கின்றது என்போர் ஒரு சாரார். அப்படியல்ல, அழகும் மாக்ஷிமையும் தங்கிய காக்ஷிகள் பலவற்றை நாம் காணுந்தோறும் அவைகள் தற்செயலாய்த் தோன்றியிருத்தல் இயலாது. அவைகளை யெல்லாம் நிருமித்தவர் ஒருவர் இருத்தல் அவசியம். அவரே கடவுள். என்போர் இன்னொரு சாரார். இவ் விருதிறத்தாரின் கோட்பாடுகளை நாம் ஆராய்வோம். முன்னவர் தமது கோட்பாட்டைத் தமது வாழ்க்கையில் அவலம்பிக்கச் சிறிதும் துணியார். ஏனெனின், அவ்வண்ணஞ் செயின் அவர் தன்னலம் பாராட்டி, மிருகங்களைப்போல் பிறர் பக்கல் வெறப் பும் குரோதமும்காட்டி இழிவானதொரு வாழ்க்கையைக் கடைப் பிடித்துக் கேடுறுவர். கடவுளிடம் ஆழ்ந்த நம்பிக்கையும் பக்தியும் படைக்கப் பெற்று அவ்வண்ணம் நடக்கும் பின்னவர், ஓவியன் (படம் எழுதுபவன்) கல்தச்சன், கட்டிடம் நிருமிப்போன் முத லானோர் அழகையே தமது லக்ஷியமாகக் கொள்வதுபோல், அழகும் ரம்மியமும் வாய்ந்த நன்னடக்கையோடு கூடிய வாழ்க் கையையே தமது லக்ஷியமாகக் கொண்டொழுகுகின்றனர்கள். ஆகவே, இவரிடம் காணப்படும் நம்பிக்கை கனிந்து கசிந்துரு கும் மனப்பான்மையோடு கூடியது. நல்லொழுக்கம் சிறந்த தென்ற கொள்கையோடு அன்பின் ஆட்சியையும் ஆற்றலையும் நன்குணர்ந்தவர் இவரேயாவர். இவரது நம்பிக்கை, கடலில் மிதந்துதவும் போயாவைப்போல, இவரது கஷ்ட நஷ்ட காலங்

களில் இவரழுந்தியழியாதவாறு வழிகாட்டி இடுக்கண்களினின் றும் காக்கின்றது. வெகுவான தைரியத்தைக் கொடுத்து இறப்புப் பீதியைப்போக்கி, ஈசனைச் சார்ந்து நுகரும் இன்பத்தையே எதிர்பார்த்தவராக்கி இம்மை மறுமை சுகிர்தங்களைத் தருகின்றது.

தமது நம்பிக்கையின் காரணமாகத் தமது உயிரை உற்சாகத்தோடு கொடுத்த மகான்களின் சரித்திரங்கள் கணக்கிடற்கரிதாகக் குவிந்து கிடக்கின்றன.

பூர்வகாலத்தில் கிரீஸ்தேசத்தில் ஸாக்ரடீஸ் என்ற பெரிய தத்துவஞானி யிருந்தார். அவர் தாம் கண்டறிந்த உண்மைகளைத் தீவிர தைரியத்துடன் உபதேசிக்கும் பான்மையர். அக்காலத்திய தெய்வக் கொள்கைகள் அவரது மனதிற்கு ஒவ்வாதனவாயிருந்தன. ஆகவே, தமது அறிவிற் கெட்டிய கொள்கைகளில் பூரண நம்பிக்கையுடையவராய், அவர் காலத்தில் வழங்கிய கொள்கைகளைக் கண்டித்துத் தமது கொள்கைகளையும் உண்மைகளையும் நிலைநாட்டுவதில் சிறிதும் பின்னடையவில்லை. காலரீதிக்குமாறுபட்டிருந்த இவரது கூற்றுக்கள், பேரிடிச் சப்தம் கேட்டுக் கலங்கும் அரவைப்போல் அக்காலத்தியவர்களது மனந் திடுக்கிடச் செய்தன. அப்போது ஆட்சி புரிந்த அரசன் அவரது அவைதீகமான உபதேசங்களைக் கேட்டு அவரைக் கொலைத் தண்டனைக்குட்படுத்திக் காராக்கிரகத்தில் வைத்தான். அவரது அறிவின் மாட்சியை யறிந்த அறிவாளிகள் பலர் சிறையினின்றும் அவரை அப்புறப்படுத்த முயன்றபோது சாக்ரடீஸ் அத்தகைய முயற்சிகள் சட்ட சம்மதமானவைகளல்லவெனக் கண்டித்துச் சிறையிலேயே யிருக்கத் தீர்மானித்தார். பின்பு, தன்னைக் கொல்வதற்கெனத் தன் கையில் கொடுக்கப்பெற்ற விஷத்தைப் புன்னகையரும்பிய முகத்தோடு குடித்துத் தான் நம்பியிருந்த உண்மையார்த்தமாகத் தனது உயிர் வாழ்க்கையைத் துறந்தார்.

அவ்விதமே, பதினாறும் நூற்றாண்டின் நடுவில் இங்கிலாந்தில் ஆட்சிபுரிந்த மேரி ட்யூடர் என்ற ராணி தனது புறமதத்து வேஷத்தின் காரணமாய், கிறிஸ்துமதத்தில் தனது பிரிவினையைக் கையாளாத பலரையும் உயிரிழக்கச் செய்தபோது, லாடிமர், ரிட்லி ஆகியோர் தாம்கொண்ட கொள்கையில் தமக்கிருந்த நம்பிக்கையினால் தமது அரிய உயிரைத் துரும்புபோல் பாவித்துத் தீயிலிறங்கி மாய்ந்தனர்.

மேலும், பதினான்கு பதினைந்தாம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் நடந்த "நூறுவருஷச் சண்டை" யினிறுதியில், தனது தேசம் தோற்று நிற்கதியடைந்தகாலத்தில் தேசாபிமானம் நிரம்பித்ததும்பிய மனத்தையுடைய ஜோான் ஆவ் ஆர்க் என்ற ஒரு பிரஞ்சு கிராமியப்பெண், தன் தேசத்தை ரக்ஷித்து வேற்று நாட்டாரின் கைகளினின்றும் விடுவிக்க ஈசன் தன்னையே நிர்ணயித்தாரென்ற நம்பிக்கை நிறைந்தவளாய் தேசாபிமான ஆவேசத்தோடு தானே கவசம் தரித்துச் சேனைகளின் தலைமையை வகித்து வெகு தீவிரமான திண்மையுடன் போர்புரிந்து பல வெற்றிகளைப்பெற்று விளங்கியிருக்கையில் துரதிர்ஷ்ட வசத்தினால் ஆங்கிலேயரது கையில் சிக்கிக் கைது செய்யப்பட்டாள். பின்பு, அவளது தேசாபிமானத்தின் நேர்மையையும் அவள் மனோவலிமையின் பாங்கையும் கண்டறியாத ஆங்கிலேயர், தனது மாந்திரீகத்தினால் அவள் அத்தகைய அருஞ் செயல்களைச் செய்தாள் என்றெண்ணி அவளை எரியிலிட்ட போது தனது தேசசேவைநிமித்தம் தனது உயிரைத்தியாகித்த அவளது மனோநிலை யென்னே!

"ஏ மலையே! உனது இருப்பிடத்திலிருந்து பெயர்ந்து அளக்கலாகா ஆழத்தையுடைய கடலில் போய்விழு' என்று மலையை நோக்கிச் சொல்லி மனப்பூர்வமாய் அவ்வண்ணமாகும் என நம்புவையேல் அவ்வண்ணம் நடந்தே தீரும்" என சமயா

சாரியரில் ஒருவராகிய ஜீஸஸ் நம்பிக்கையின் நேர்மையை வலி யுறுத்தினர். மலை நகர்ந்து உடனே கடலில் விழுந்து மூழ்கி விடும் என்றது அவரது கூற்றின் தாற்பரியமல்ல. அசலமாகிய மலை நகரக்கூடுமென எவரும் எண்ணி நம்புவதற்குமில்லை. ஆனல், நம்பிக்கை எத்தன்மைய வலிமையுற்றது என்பதை எடுத்துக்காட்டுவதே ஜீஸஸின் நோக்கம். நிகழக்கூடாததை நிகழும் என்றெண்ணி நம்பினும் அது நிகழ்ந்தே தீரும். அதற் கிணங்கவே தனது சிஷ்யகோடிகளுக்கும் ,கடவுளைத்தியானிக்கும் போது அந்தத்தியானம் உண்மையில் நிறைவேறும் என்ற உறுதியோடு அவர்கள் தியானித்தால், அவ்வாறே நிறைவேறும் என அவர் உபதேசித்தார். மேலும், அவர் நோயாளிகளிடத்துச் சென்று தொண்டு செய்கையில் அந் நோயாளிகள் ஈசன்பால் முதிர்ந்த நம்பிக்கை கொண்டால் மட்டுமே அவர்களது நோய் எளிதில் அகலும் என்பதை வற்புறுத்துவார்: 'Thy faith hath made thee whole.' 'According to your faith be it unto you.'

'நம்பிக்கையுடையோர் நலமடைவர்' என்ற கூற்றையே சென்னையில் தனது வைத்தியசாலையின் தத்துவக்கட்டுரையாகப் பண்டிதர் எஸ். எஸ். ஆனந்தர் கொண்டிருப்பது இங்கு நாம் பாராட்டற்பாலது. வைத்தியப் பயிற்சியிலும் நோயாளிகள் முழு நம்பிக்கையுடன் ஔஷதங்களை உட்கொள்ளுதல் அவசியம் என வும், நம்பிக்கையின்றேல் எத்தகைய சிறந்த மருந்துகளை உட் கொளினும் அவைகள் நலம் பயப்பதில்லையென்றும், ஆகவே தேகத்தன்மைக்கும் மனப்பான்மைக்கும் வெகுவான நெருக்க மும் சேர்க்கையும் உண்டென்றும் கண்டறிந்த கீழ் நாட்டுத் துணிபை மேல் நாட்டாரும் சமீப காலத்தில் அங்கீகரித்துப் பத்திரிகைகளின் வாயிலாகத் தெரியப்படுத்துவது யாவருக்கும் வெளிப்படை.

இல்வாழ்க்கை கல்வி யிலாகா முதலியவைகளிலும் இவ்வுண்மை நன்கு புலனாகும். நமது வாலிபரிடத்துக் காணப்பெறும் குற்றங்களின் காரணங்களை நாம் எளிதில் தேர்ந்தறிவதற்கில்லை. மனிதனது மனோவளர்ச்சியில் பல பிராயங்களுக்கேற்ப காணப்படும் மனப்பான்மை, விருப்பு வெறுப்புக்கள் முதலிய அம்சங்களை விளக்கும் மனோதத்துவ சாஸ்திரம் சிறுபான்மையே அத்தரப்பில் நமக்குப் பயன் படுகின்றது. நமது வாலிபரிடத்து நாம் நடந்து கொள்ளும் விதமே அவர்களது சுபாவ ஹீனங்களை யறிவதற்கேற்ற கருவியாயிருக்கின்றது. அது எங்ஙனமெனில், நாம் எவ்விதம் அவர்களைப் பாராட்டுகின்றோமோ அவ்விதமே அவர்கள் ஆகின்றார்கள். அவர்களைப் பற்றி நாம் சிந்திக்கும் சிந்தனைகள், சொல்லும் சொற்கள், அவர்களுக்காகப் பரிவுடன் கொள்ளும் விசார வியாகூலங்கள் ஆகிய இவைகளுக்கேற்பவே அவர்கள் உருப்படுகின்றார்கள். அவர்களைப் பற்றி நல்ல அபிப்பிராயங்கள் உலவினால் அவர்கள் மனத்தில் அவ்வபிப் பிராயங்கள் ஆழ்ந்து அவர்களைக் காலாந்தரத்தில் சீர்பெற்று விளங்கும் புருஷோத்தமர்களாக்குகின்றன. அவர்கள் காதிற் படும்படி அவரது குற்றங்களையும் அதிருப்திகரமான போக்குப் பாங்குகளையும் பேசுவோமேல் அக் குற்றங் குறைகளும் அதிருப்திகரமான போக்குப் பாங்குகளும் அவர்களை விட்டகலாது கல்லில் செதுக்கிய எழுத்துக்களைப் போல் அவர்பால் நிலை பெறுகின்றன. அவர்களிடஞ் சொல்லும் சொற்களை விட அவர்களைப் பற்றிச் சொல்லும் சொற்களேஅவர்களை அதிகமாய்ப் பாதிக்கின்றன. விஷ வண்டு புழுவைப் பன்முறை கொட்டித் தன்னினமாக்குவதுபோல், "மடையன் நீ" எனப் பன்முறையும் நாம் கடிந்துரைப்பின் அதைச் செவியுறும் வாலிபன் தான் உண்மையில் மடையன் என எண்ணி நிசமான அறிவீனனாகின்றான். ஆகவே, நல்லாசிரியரும் நல்ல தாய் தந்தையரும், முறையே

தமது மாணவரும் வாலிபரும் நல்லொழுக்க மெய்தி நலனுற வேண்டுமெனில், அவர்களிடம் வசிகர வார்த்தைகளின் வாயிலாக அவர்கள் நற்குண நற்பயிற்சிகள் கையாள்வதினுல் நிகழும் மேம்பாட்டை யெடுத்தோதி அவர்களுக்கு உற்சாகத்தையும் ஊக்கத்தையும் ஊட்டினுல், காலக் கிரமத்தில் சகல குண சம்பன்னர்களாகி அறிவு நிரம்பி பெரும் புகழ்பெற்று நிலவுவர்.

ஆகவே, நம்பிக்கையின் ஆற்றல் அளவற்றது. மேலும், நம்பிக்கை ஒரு பெரிய ஆன்ம சக்தியாகும். 'கடவுள் ஒருவர் இருக்கின்றுர் என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு' எனப் பலரும் சொல்லக் கேள்வியுற்றிருக்கின்றோம். ஆனுல் அந் நம்பிக்கையினுல் ஏற்படும் பரவசமும் பரமஆனந்தமும் ஒரு சிலரே யடைகின்றுர்கள். ஆகவே, கடவுளிடத்துக்கொள்ளும் உண்மையான நம்பிக்கையும் அதனுலேற்படும் அன்பும் நமக்கு நிர்மலமான இருதயத்தையும், மனோவானந்தத்தையும், ஆன்ம சக்தியையும் அளிக்கின்றது. கட்புலனுவதல்லாமல் ஒளிந்து மறைந்து கிடக்கும் நுண்ணிய விஷயங்களைப் பற்றித் தாறுமாறுகத்தர்க்கித்து நம்பாத புன்மக்கள் நிறைந்த இந்தப் பூதலத்தில் பணமே பரம்பொருள் என்ற கோட்பாட்டையுடைய இந் நூற்றுண்டில் உண்மையான நம்பிக்கை எத்தகைய பயனைத் தருவதாகும்!

ஏ. சவுரிராஜுலு நாயுடு, B.A., L.T.,



# தமிழ்த் தாய் வீரம்

ஒரு வயதுமுதிர்ந்த அம்மையார் ஒரு வயதுமுதிராத குழவியை மடிமீது வைத்து விளையாட்டுக் காட்டிக்கொண்டு வீட்டில் முதலறையில் உட்கார்ந்திருக்கிறாள். பக்கத்தில் ஒரு இளம்பருவத்த பெண்மணி சுவரில் சாய்ந்து கொண்டு சற்றே மயங்குகிறாள்.

கிழவி:—"அம்மணி! தூங்க வழி பார்க்கிறாயே! பிற்பகல் மூன்று மணிதானாகிறது. இப்பொழுதே தூங்கலாமா? இன்னும் எப்படியாவது ஒருமணிநேரம் தூங்காமல் கழித்து விட்டால் அதற்குள் உன் தம்பியும் தங்கையும் பாடசாலையிலிருந்து வந்துவிடுவார்கள். பிற்பாடு அவர்களுக்கு பண்டம் கொடுத்துவிட்டு அவர்களோடு சில நேரம் விளையாடலாம். அவர்களுடைய இன்றைய பாடங்களை எப்படி தெரிந்துகொண்டார்கள் என்று கவனிக்கலாம். பொறுத்துக்கொள். இன்னும் ஒருமணி நேரந்தானே."

அம்மணி:—"நீங்கள் தூங்கவேண்டாமென்கிறீர்கள். எனக்கோ தூக்கம் கண்ணைச் சுற்றுகிறது. இந்த தாமிரபர்ணி தீரத்தலத்தில் இந்நேரத்தில் வெயில் இவ்வளவு கடினமாயிருந்தால் இன்னும் பொட்டல்களாயிருக்கும் இடங்களில் எவ்வளவு இராது. இந்த வெப்பம்தான் கண்ணை மயக்குவது.

பாட்டி:—அது மட்டிலுமல்ல, நீ பிள்ளையாயிருத்தலால் உன் உடலுக்கு சோர்வும் இருக்கும். ஆனாலும் தூங்காமலிருத்தலே நலம்

அம்:—அதற்கு என்னவழி? பாட்டி ஒரு கதை சொல்லுங்கள்.

பா:—தூங்குவதற்கு அது தாலாட்டுப்போல இருக்கும்.

அம்:—அது கதையின் இன்பத்தைப் பொறுத்திருக்கிறது.

பா:—ஆனல் வீரம் பொழியும் ஒரு கதை சொல்லுகிறேன். காது கொடுத்துக் கேள்.

## கதை.

முன்னொருகாலத்தில் நம் இனிய செந்தமிழ் நாட்டில் செல்வமும் வீரமும் செறிந்த அரசர்களும் குடிகளும் வாழ்ந்திருந்தார்கள். அரசர்கள் தம் குடிகளிடத்தாயினும் பிற அரசர்களிடத்தாயினும் 'சிறுமை புறங்காத்தல்' கடனெனக்கொண்டு புகழொடு தோன்றும் விழைவால் தங்கடன் முறைமை தவறாது நடத்துவார்கள். நடத்துவதில் போர் இன்றியமையாத தொன்றாகும். அன்றியும் உலகப் போக்கில் 'போர்' என்பது 'போ' என்றால் போவதும் 'வா' என்றால் வருவதுமல்ல. பல நாளாய் நாட்டினிடத்தே இலைமறை காய்போல் உள்ளுறைந்து வளர்ந்து வெளிப்படுகின்ற ஏதுக்களால் அப்போர் தோன்றுவதாகும். அதன் முடிவும் இயற்கையின் ஆற்றலை அடிப்படையாகக்கொண்டு உரிய காலத்தே ஏற்படும். உலக வரலாற்றின் நுண்மையை ஆராய்ந்தால் 'அவர் போருக்கு முதற்காரணர்' 'இவர் சச்சரவு ஒறுக்கினர்; அடக்கமும் இன்பமும் விளைவித்தார்' என்பதெல்லாம் அறியாமையாகவே அமையும். இவ்வாறு நிகழும் போர் முன்னிருந்த இரண்டரசர்களுக்குள் நடந்துகொண்டிருந்தது. இருக்கவே அவர்களில் ஒரு அரசனுடைய படைகளில் பலர் மாண்டனர். அவ்வரசனோ 'செவி

கைப்பச் சொற் பொறுக்கும் பண்புடையவனாதலாலும் 'காட்சிக்கெளியன் கடுஞ் சொல்லனல்லன்' ஆதலாலும் அவன் நிலம் மீக்கூறப்பட்டு, அவன் கவிகைக் கீழ்த்தங்கிய குடிகள் தம்மன்னற்கு வந்த குறையை தங்களுடையதாகத் தனித்தனி எண்ணி ஒவ்வொரு வீட்டிலிருந்தும்படைதாங்கும் திறனுடைய பருவம் வந்தவர் யாவரும் போருக்கு ஆயத்தமாய் நின்றார்கள். ஒருநாள் சண்டைமுடிந்து எவரும் ஊர் நோக்கித் திரும்பி வருகையில் ஓர் நரைமூதாட்டி உடம்பெல்லாம் 'நரம்பெழுந்துலறி வளிந்த யாக்கையளாய் தளர் நடையளாய், தெருவில் குடிபடர் ஓதைகேட்டு விரைவில் வந்து நின்று, விழுந்து கிடக்கும் தன் இமைகளை மேலே உயர்த்தி உற்று நோக்கி தன் மகனைப் பற்றிக் கேட்கலானாள். பல பேர்களும் 'உன் மகன் போருக்குடைந்து புறங் கொடுத்தகன்றான் பின்னர் யாம் கண்டிலேம்' என்றார்கள். இச்சொல் அவ்வம்மையார் செவித் துளையில் நுழைந்தபோது அவள் தோற்றத்தின் திறம் எடுத்துரைக்க கல்வியிற் சிறந்த கம்பனும் கருத வேண்டாம். கண்கள் செவந்து தீப்பொறி பறக்கும் வண்ணம் விளங்கின. உதடு படபடவென்று துடித்தது. உடல் முற்றிலும் நடுங்கினது. நிமிர்ந்தாள். தன் இளமைப் பருவத்த உறுதி இப்பொழுது தன் மெய்யில் புகுந்ததோ என்னும்படி நின்று கொண்டு வாயைத் திறக்கின்றாள். என்ன சொல்லுகிறாள் என்று நன்கு கவனிப்பாய்.

" ஆ! என்மகனா போருக்காற்றாது புறங்கொடுத்தான் என்கின்றீர்கள். எங்கள் வழிக்கு இழிவையோ அவன் இயற்றினான் என்கின்றீர்கள். அவன் உண்ட பாலின் திறமோ அவனிடம் காணப்படவில்லை. மானமோ கைவிட்

டான். இஃதுண்மையாயின் அவனை ஊட்டி வளர்த்த இம் முலையை என் கை வாளால் அரிந்து விடுகிறேன்.''

என்ன கடுமொழி! இவ்வளவு வயதுக்குமேல் என்ன வீரம்! கையில் ஏந்திய வாளோடு இதோ போர்க்களம் நோக்கி விரைகின்றாள். இவ்வம்மையார் அரும்பெறற்செயல் என்னாகும் என்று காண விருப்பங்கொண்டு பலர் பின் தொடர்கின்றார்கள்.

ஒருவன்:—'மான மிழந்தபின் வாழாமை முன்னினிது' இது என்ன அருமை.

இன்னொருவன்:—என்ன செய்வாள்; எங்கே போகிறாள்.

மற்றொருவன்:—போர்க்களம் நோக்கிச் செல்கின்றாளாம். விரைவாக வன்றோ நடக்கின்றாள். நாமும் விடாது செல்வோம். முன்னர் மெள்ள மெள்ள நடந்ததெல்லாம் பொய்ந் நடையோ?

முதலவன்:—மூடா! யாக்கையின் தளர்ச்சியை எண்ணுமா உள்ளத்தின் திரம்? நல்லொழுக்கம் உடையளாய், தன் மகனின் மேன்மையையே உயிருள்ளளவும் கருதி வாழும் இவ்வம்மைக்கு தான் கொண்ட எண்ணம் முடிப்பதில் எவைதான் தடையாகும். எண்ணியவைகளை எண்ணிய வண்ணம் எய்தமாட்டார்களா எண்ணியார் திண்ணியராகப் பெற்றால்?

இரண்டாவன்:—உண்மை, நாமும் முன்சென்று இப் பரிவுடையதாயின் செயலை முற்றிலும் காண்பம்.

மூன்றாவன்:—இதோ போர்க்களத்துக்குள் கால் வைத்துவிட்டாள் முறுக நடவுங்கள். நெருங்கிப் பார்ப்போம்.

இந்தப்படி சனங்கள் பலப்பல பேசிக்கொண்டு திரள் திரளாய் அத்தீரமாதினை ஒட்டியே சென்றார்கள். அவ்வம்மையோ தான் கொண்ட குறி ஒன்றையே காண்கின்றாளன்றி மற்றெவையும் அறியாள். ஆரியக்கூத்தாயினும் காரியமன்றோ கண்ணாயிருப்பர் அறிஞர். குருதிபடர்ந்து வீரர்களுடைய அணிகளும் வாளும் வேலும் மற்றைய படைகளும் ஒளிவிட்டு விளங்கி மீன்கள் கதிர்விடுகின்ற செவ்வானம் போன்ற போர்க்களத்தைக் குறுகினான். குனிந்து தன் நாடி தரையில் படும்படி நாடி, ஒவ்வொரு உடல் துண்டங்களையும் கையால் புரட்டியும், தள்ளியும், தூக்கியும் பார்க்கின்றாள். இதோ ஒரு துணியை கையிலெடுக்கின்றாள். அவள் முகத்தில் மடிந்துகிடக்கும் சதையில்லாத் தோலில் தெளிவு சற்றே காணப்படுகின்றது. அந்தோ! அப்பொலிவு உடன் மறைந்துவிட்டது. கீழே அதை எறிகின்றாள். பெயர்ந்து செல்கின்றாள். அயலே கிடக்கும் ஓர் அயிலைக் கண்ணுற்றாள். சற்று நிதானித்து அதைக் கையிலெடுக்கின்றாள். உற்றுநோக்குகிறாள். அதன் இலையில் கண்ட குறிகளை உணர்ந்து உள்ளக்களிப்பு கண்களில் விளங்கா நிற்க கிழ்நோக்கி வெட்டுண்டு கிடக்கும் ஓர் உடலின் பக்கத்தில் வேறுபட்டிருக்கும் தலையை கையால் தூக்கினாள். ஊன்றி உணர்ந்து மறுகையிலிருந்த வாளைக் கீழே எறிகின்றாள். "ஆ! என்னாரியவீர சிங்கமே! என் கண்மணீ!" என்கின்றாள்; பெருமூச்சு எறிகின்றாள். மரித்த தலையென்றும் பாராது உச்சிமோந்து மகிழ்கின்றாள். பின்னர் சிறிது தளர்வெய்தி அருகிலிருந்து சிறிதுகலங்கி உடன் தெளிந்து "அருமை மகனே! உனக்கூட்டிய பாலன்றோ உறுதிபயப்பது; எழுமைக்கும் ஏமாப்புடையது. தன்

முன்னோர் எழு பிறப்பும் தீயவை தீண்டா வண்ணம் நன்கி யற்றும் பழி பிறங்காப்பண்புடை மகனென்ற பாலது உரிமையின் உன்னையன்றோ! 'இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னும் சொல்' உன்னைச் சுட்டியன்றோ உலகம் உரைக்கும்? தன் நாட்டிற்காகவும் தன் மன்னனுக்காகவும் உயிரைப் பலி கொடுத்த என் கண்ணே! என்று இரங்கி மகிழ்ந்து வீடு நோக்கித் திரும்பினள்.

முதலவன்:—ஆகா! பார்த்தீர்களா! இவ்வூக்கமுடைய அம்மையின் வீரம்! இத்தகைய வீரத்தாய்மார்களன்றோ நம் நாடெங்கும் தழைத்திருக்க வேண்டும். இவர்களா லன்றோ ஆண்மை மிக்க அருமைச்சிறார்கள் தோன்றி உயர்வார்கள். உலகத்தையும் உயர்விப்பார்கள். இவ் வீரத் தாய்க்கு இன்றுண்டாய உவகை அக்குழவியை அவர் ஈன்ற நாளினும் மிகப் பெரிதே ஆகும்.

இரண்டாவன்:—இவ்வம்மையாரை ஒருமகனையே தந் தாளென்று கொள்ளற்க. இவளுடைய வீரம் எவ்வெக் காலத்திலாயினும் எவ்வெவர்கள் உள்ளத்திலெல்லாம் இடம் கொள்ளுகின்றதோ அவர்களெல்லாம் இவ்வம்மை யார் வீரத்திற் பிறந்த மக்கள் எனலே தகுதியாகும்.

முதலவன்: "அகனுலகம் எண்ணிறந்த சரா சரங் களின்றும் தாழாக் கொங்கையற் கண் மலர்க் கூந்தல் குமரி பாண்டியன் மகள் போல் கோலம் கொண்ட அங்கயற் கண் ணம்மை அன்று தமிழ் நாட்டுக்கு கன்னி நாடு என்று பெய ரளித்ததுபோல் இன்று இந்நரைமூதாட்டி வடிவு தாங்கி வீரத்தாய் நாடு என்று பெயரளிக்கின்றாள் போலும்.

இரண்டாவன்:–இன்னும் இத்தகைய வீரத்தாய்மார்

கள் பல உண்டாமாறு உலக நாயகியை உவகையுடன் வேண்டிக்கொள்வோமாக.

முதலவன்:—மெய்ந் நாவாாகிய திருவள்ளுவர் இவ் வீரத்தாயின் இன்பம் நன்கறிந்தவர். "ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோனெனக் கேட்ட தாய்."

இவ்வாறு தமிழ் நாட்டையும் திருவள்ளுவரையும், வீரத் தாய்மார்களையும் வாழ்த்திக்கொண்டு யாவரும் தாங் கள் அன்று கண்டகாட்சி கண்ணை விட்டகலாது, கருத்தை விட்டொழியாது, தங்கள் தங்கள் தங்குமிடம் குறுகினர் கள்.

இக் கதையை அடிமுதல் முடிவரையில் அகம் குழைந்து கேட்டுக் கொண்டிருந்த அம்மணி பாட்டியை நோக்கி,

"பாட்டி! எனக்கு இரண்டொரு சந்தேகங்கள் உள் ளன. போர் அவசியம் என்றும் நடந்தே தீரும் என்றும் சொன்னவை தெரிந்துகொண்டேன். அரசனுடைய மேன் மையைக் குறிக்கும் காலத்து 'செவிகைப்பச், சொற் பொறுக்கும் பண்புடையவன், என்றீர்களே" அதென்ன?

பாட்டி. இப்பொழுதுதான் நீ கதையைத் தூங்காமல் கேட்டதின்பயன் அடையப் போகிறாய். அரசன் தனக்கு கடவுளால் அளிக்கப்பட்டதென்று கருதி தன்னுடைய குடிகளைப் பாதுகாக்கும்பொழுது தன் பரிசனங்கள் செய் யும் செயல்களை தம்முடையனவாகக் கொண்டு அவை களிற் கண்ட குற்றம் குறைகளை குடிகள் தம் செவிப்படும் படி சொல்லுங்காலோ, அல்லது ஒற்றர்கள் மூலமாகத்தான் உணருங்காலோ, அவைகள் துன்பம் தருவனவேனும்

பொறுமையுடனிருந்து அறிவீனத்தால் வரும் கோபத்திற்கிடம்கொடாமல் இருக்கும் அவன் திறம் சொல்லப்பட்டது. இத்தகைய அரசன் குடையின்கீழ் களிப்புடன் குடிகள் வாழ்வார்கள் என்று சொல்லப்படும்.

அம். அது தெரிந்துகொண்டேன், பாட்டீ! இன்னென்று. அவ்வீரத்தாய் ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தபடி எங்ஙனம்?

பாட்டி. இதுதான் இக் கதையின் சிறப்பு நீ இப்பொழுது உணரவேண்டுவதும் இதுவேயாகும். கருத்தாங்கிப் பத்துமாதம் வரையில் கண்ணிற் காணமல் காணுதற்கு ஆவலோடு எதிர்பார்த்திருந்து தன் உடம்பின் உள்ளே வைத்து வளர்த்துவந்த கரு உருப்பெற்று, உயிர்பெற்று வெளிவந்துகாண அத்தாய்க்கு வரும் இன்பத்தின் திறம் கட்டுரைத்தல் கடிது. சிறிதாக ஒருவாழைவைத்து அது குலை தள்ளுவது காண்டல் எவ்வளவோ இன்பத்தைத் தருகின்றது. ஒருகணக்குச் சரியாய் செய்துமுடித்து பேராப் பணம் காணும்பொழுதும், ஒரு செய்யுளுக்கு உரை புரையறத்தாமே கண்டுணரும் பொழுதும் உண்டாம் ஆனந்தம் எல்லாச் சிறுமிகளும் நன்கறிந்ததாகும். அஃதவ்வாருக, பலநாள் ஒருவர் செய்த வேலையின் நன்முடிவு பார்த்து இன்புறுதல் வேறுபடக்கருதற் பாற்றோ? மேலும் அங்ஙனம் விளைந்தமுடிவும் பல்லாராலும் பயன் துய்த்து இன்புற்று புகழப்படுமேல் அதற்கு முதற்காரணமாயிருந்ததாய் அடையும் மகிழ்ச்சி எல்லை கண்டறியப்படாததே. 'கரை செய்ய அரியதொரு பேருவகைக்கடல்' அதுவேயாகும். இஃதுன் உள்ளத்தில் உற்றதுபோல் நம்மவர் பலருள்ளத்தும் பதிந்து விளங்குமானல் நம் இனிய நாடு செழித்தற்கு நன்மருந்தாகும்.

அம்.—என் தூக்கம் பறந்தே போயிற்று.

பாட்.—தூக்கத்தைப் பறக்கடிப்பது மட்டிலுமா இக்கதை செய்திருக்கிறது? இன்னும் அரிய வேலை உன்னகத்தே இது செய்திருக்கிறது. அதை நீ இப்பொழுதுணராய். உன் கருவுயிர்த்து அருமைக் கண்மணியை கையிலெடுத்து முத்தமிடுங்கால் அறிவாய்.

அம்.—'இதுதான் பாட்டியின் வேடிக்கை' இதோ தம்பியும் தங்கையும் வந்து விட்டார்கள்' என்று சொல்லிக்கொண்டு அவர்களோடு அம்மணியும் சென்றாள். பாட்டி குழவியை தாலாட்டிக் கொண்டிருக்கிறாள். குருசாமி.

# புறநானூறு 278.



"நரம்பெழுந்துலறிய நிரம்பாமென்றோண்
முளரிமருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்துமாறினன் என்றுபலர்கூற
மண்டமர்க்குடைந்தனனாயினுண்டவென்
முலையறுத்திடுவன் யானெனச்சினைஇக்
கொண்டவாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
வீன்றஞான்றினும் பெரிது வந்தனளே."

திணை—தும்பை.

துறை—உவகைக் கலுழ்ச்சி.

காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்.

# திருக்குறட்பாயிரக் கருத்து.

திருக்குறள் இற்றைக்கு சுமார் 1900 ஆண்டுகளுக்கு முன்னே தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரால் உலகின் கணுள்ள மக்களெல்லாம் உய்யும்பொருட்டு இயற்றிய ஓர் அரிய பெரிய தமிழ் நூல். அது இரண்டு அடியாலாகிய குறள் வெண்பாவாலாக்கப்பட்டதால் திருக்குறள் என்னும் பெயர் பூண்டது. ஆயிரமுகத்தா னமைந்ததாயினும் பாயிரமில்லது பனுவலன்றே என்ற ஆன்றோர் முறைப்படி திருவள்ளுவநாயனர் இந்நூலுக்குப் பாயிரமாகக் கடவுள் வாழ்த்து, உ, வான் சிறப்பு, ௩. நீத்தார் பெருமை; ௪. அறன் வலியுறுத்தல் என்கிற முதல் நாலு அதிகாரங்களையுஞ் செய்தருளினர். இந்நான்கு அதிகாரங்களும் பாயிரம் என்பது அவர் தாம் முதலாவது சொல்லப் புகுந்த அறத்துப்பாலின் முதற் பகுதியதாகிய இல்லறவியலுக்கு முன்னே அவைகளை வைத்த வைப்பு முறையே இனிது விளக்கும். இந்த நான்கு அதிகாரமும் பாயிரம் என்பதை சிறப்புப்பாயிரம் சொன்ன சங்கப் புலவர்களில் சிறுமேதாவியார் " வீடொன்று பாயிரம் நான்கு" எனவும், எரிச்சலூர் மலாடனர் "பாயிர நான்கில்லறமிருபான்

மூன்றே" எனவும், நத்தத்தனர் "ஆயிரத்திமுந்நூற்று முப்ப தருங்குறளும் பாயிரத்தினொடு" எனவும் தாங்கள் பாடிய வெண்பாக்களில் விளங்க வுரைத்தருளினர்கள். இங்கே நான் சொல்லப்புகும் கருத்துரைகளும் இந்த நான்கு அதி காரங்களும் பாயிரம் தான் என்பதை வற்புறுத்தும்.

2. திருவள்ளுவ நாயனர் முதல் நான்கு அதிகாரங் களையும் பாயிரம் யாது கருத்துப்பற்றிச் சொல்லியருளினர் என்பதே இங்கே நான் எடுத்துக்கொண்ட ஆராய்ச்சி யாகும்.

3. பாயிரத்தைப்பற்றி தொல்காப்பியம் நச்சினர்க்கினி யார் உரையிற் கூறியதாவது :—

"பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண் பொருட்டாகிய நூலினிது விளங்கும்" என்ருராகலின்.

"அப்பாயிரந் தான் தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும்போலவும் நூற்கு இன்றி அமையாச் சிறப்பிற்றயிருத்தலின், அது கேளாக்காற் குன்று முட்டிய குரீஇப்போலவுங் குறிச்சி புக்கமான்போலவும் மாணுக்கன் இடர்ப்படும் என்க."

ஆகலான் எநூல் உரைப்பினும் பாயிரம் உரைத்து நூல் உரைப்பதே மரபு என்று பண்டைத் தமிழ் நூற் புல வர் நிறீஇனர்.

4. மேலே சொல்லிய முறைமைப்படி திருக்குறள் நூலில் நுண்பொருளவாகக் கூறப்பட்டன பருப்பொருள வாக முதல் நான்கு அதிகாரங்களிலும் எவ்வாறு கூறப்பட் டுள்ளன என்பது கருதுவாம்.

5. நூலிற் கூறப்படும் பொருள்கள், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் மக்களால் உலகவாழ்வில் அடைதற் பாலனவாகிய நான்கு உறுதிப் பொருள்களாம். திருவள்ளுவ நாயனர் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுபொருள் களையும் நூலில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப் பால் என மூன்று பால்களாகப் பகுத்து அவற்றின் இலக் கணங்களை யெல்லாம் விரிவாகவும் வீட்டைப்பற்றி பாயி ரத்தில் கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்திலும் அறத் துப்பால் துறவறவியலில் நிலையாமை துறவு மெய்யுணர்வு அவாவறுத்தல் என்ற நாலு அதிகாரங்களிலும் காரண வகையாற் றொகுத்துங் கூறியருளினர். ஆகவே நாயனர், கீரந்தையார் சிறப்புப்பாயிரமாகிய திருவள்ளுவ மாலையில் "முப்பாலினுற்பான் மொழிந்தவர்" என்று கூறியவண்ணம் முப்பாலினும் நான்கு பாலையும் மொழிந்தார்.

6. மக்கள் நான்கு உறுதிப் பொருள்களையும் அடை வது உலக வாழ்விலேயே. இந்த உலகவாழ்வு உண்டாம் பொருட்டும் செவ்விதின் நடை பெறும் பொருட்டும் முதற் கண் வேண்டப்படுவது கடவுள். "தானலா துலகமில்லை" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறியருளியபடி கடவு ளின்றி உலகம் உளதாகாது; உயிரிலபொருளும் உளதா காது; உயிர்ப்பொருளும் உளதாகாது. ஆகையினலே நாயனர் பாயிரத்தில் முதல் அதிகாரமாகக் கடவுள் வாழ்த் துக் கூறினர். கடவுள் வாழ்த்து மங்கல வாழ்த்து வணக் கம் பொருளியல்புரைத்தல் என மூவகைப்படும். இம்மூன் றனுள் நாயனர் முதலதிகாரத்திற் கூறிய வாழ்த்து பொருளி யல்புரைத்தலாகும். நாயனர் கடவுள் வாழ்த்தை பொரு ளியல்புரைத்தல் என்ற வகையிற் கூறியது தாம் நூலில் நுவல எடுத்துக் கொண்ட நன்பொருள்களைப் பருப்பொ ருள்களாகக் குறித்து விளக்குதற் பொருட்டென்க.

7. உயிர்களின் உலகவாழ்வு அதனை யியக்கும் ஒரு கடவுளை யன்றி நிகழாது என்று சொல்வதனோடு அமையாது நாயனர் முதல் எட்டுக் குறள்களிலும் கடவுள் இன்ன இன்ன குணம் உடையவர் என்று வகுத்துக் கூறி ஒன்பதாவது குறளில் அவ்வெட்டுக் குணங்களையுந் தொகுத்துக்கூறி இத்தகைய பேரறிவும் பேரன்பும் பேராற்றலும் உடைய கடவுளை மக்கள் மனதான் நினைந்து நாவினல் வாழ்த்தி காயத்தால் வணங்கி வழிபட்டால் அன்றி உலகவாழ்வின் பயனாகிய பிறவிப் பெருங்கடலை நீந்துதல் முடியாது என்று பத்தாவது குறளில் வற்புறுத்தியருளினர். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களுள் உயிர்கள் முடிவில் அடையும் பொருள் வீடு ஒன்றே என்பதையும், அறம் பொருள் இன்பம் என்ற மூன்றும் வீட்டை அடைவிக்கக் கருவிகளா யுதவும் இடையிலுள்பொருள்களென்பதையும், அறமானது பொருள் இன்பம் போலாது வீட்டினையும் உதவவல்லது என்பதையும் நாயனர் இவ்வதிகாரத்தில் குறிப்பித்தருளினர். இன்னும் அவர் கடவுளை எல்லாக் குறள்களிலும் ஒருமையிற் சொன்னதனுலும் முதலாவது குறளில் கடவுள் தன்வயத்தனுதல் என்ற குணத்தைச் சார்ந்த முதன்மை யுடையவன் என்றும் 7-வது குறளில் கடவுள் தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாதவன் என்றும் கூறியதனுலும் முழுமுதற்கடவுள் ஒருவனே என்றும் அவன் உயிர்களையெல்லாம் ஆளுந்திறத்தினையுடையவன் என்றும் 2, 3, 4, 5, 6, 7, 8, 10, குறள்களில் உயிர்களைப் பன்மையிற் கூறியதனுலும் வணங்குமுயிர்களைக் குறிக்குமிடத்து 9-வது குறளில் வணங்காத் தலையென்றும் வணங்கப்படும் கடவுளைக் குறிக்குமிடத்து 2, 3, 4, 7, 8, 9, 10, குறள்களில் தாள் என்றும் அடியென்றும் கூறியதனல் உயிர்கள் பல என்றும் அவர்கள் கடவு

ளால் ஆளப்படுந்தன்மையுடைய அடிமைத்திறம் வாய்ந்த வர்களென்றும் உயிர்களின் தொழிற்பாட்டைக் குறிக்கு மிடத்து 2, 4, 7, 8, 10 குறள்களில் சேர்ந்தார் சேராதார் என்று கூறியதனுல், உயிர்கள் ஒன்றனைச் சார்ந்து நிற்றலும் சார்ந்ததன் வண்ணமாதலுமாகிய இயற்கைக் குணம் உடையவர்களென்றும் அறியாமையினுல் உலகத்தைச் சார்ந்து அதன்வண்ணமாய் குறைந்த இன்பத்தையும் பெருந்துன்பத்தையும் அடையும் உயிர்கள் பேரின்ப பயனுகிய கடவுளைச் சார்ந்தாலல்லாமல் பிறவிப் பெருங்கடலைக்கடந்து வீடு அடைய முடியாதென்றும் நாம் ஊகித்தறியக் கிடக்கின்றன.

8. இனி முதலாவது அதிகாரத்திற் கூறியவாறு உலகில் உயிர்ப்பொருளையும் உயிரில பொருளையும் இயக்கி ஆள வல்லது அக்கினியிற் சூடுபோல கடவுளி னின்றும் பிரிக்க வொண்ணுத அவனுடைய அருட்சத்தியாகும். இந்த அருட்சத்தி தொழிற்படாது கடவுளிடம் ஒடுங்கி யிருக்கும் காலத்து உலகமுந் தொழிற்படாது. அருட்சத்தி வெளிப்பட்ட பொழுது தான் உலகமும் வெளிப்பட்டுத் தொழிற்படும். இந்த அருட்சத்தியின் வெளிப்பாடாகக் கற்றூரும் கல்லாதாரும் அறிவுடையாரும் பேதையரும் உலகில் கண்கூடாகக் காணக் கூடியது மழை. மழையின்றி உலகியல் நடவாது என்பது யாவருக்கும் வெளிப்படை. மழை ஒருக்கால் உலகிற் பெய்தலும் மற்றொருக்கால் பெய்யாதிருத்தலும் எத்தகைய ஆற்றலும் அறிவும் உடைய மக்களின் சத்திக்கும் மேற்பட்ட ஓர் சத்தியின் றொழிற்பாடு என்று யாவரும் அறியலாம். பருவகாலத்தில் மழை பெய்தாலன்றி உயிர்கள் பசி நோயால் வருந்துவர் என்றும் வெளிப்படையான செயலானது உயிர்கள் கடவுளின் அருள்வழி உலகில் ஒழுகினுலன்றி துன்பமடைந்து வருந்து

வாரென்னும் உண்மையைக் குறிப்பாலுணர்த்துகின்றது. இந்த உண்மையை நாயனர் "துளியினமை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்—அளியின்மை வாழுமுயிர்க்கு" என்று அரசன் சம்பந்தமாய்க் கூறினர்.

9. மேலே கூறிய காரணங்களினல் நாயனர் பாயிரத்தின் இரண்டாவது அதிகாரமாக கடவுள் வாழ்த்துக்கு அடுத்து கடவுளின் அருள்வெளிப்பாடாகிய வான்சிறப்பை வைத்தருளினர். வான் என்று சொல்லாது வான் சிறப்பு என்று அவர் அதிகாரத்துக்கு பெயரீடு தநதது மழை உலகம் நடைபெறுதலுக்கு இன்றியமையாமையைக் குறித்தற்பொருட்டு. மழையானது மாநிலத்து உயிர்களுக்கு குடிநீரா யுதவுவது மன்றி உண்ணுவதற்கேற்ற உணவுப் பொருள்களையு முண்டுபண்ணுகிறது என்றும் மழை பெய்யாவிடில் உழவர் உழவு தொழிலைச் செய்து உணவுப்பொருள்களை யுண்டுபண்ண மாட்டார்கள் என்றும் இல்லற வாழ்க்கையிலுள்ள மக்கள் ஏனைய மூன்று ஆச்சிரமத்திலுள்ளவர்களுக்கும் உற்ற துணையாயிருந்து தானம் செய்ய மாட்டார்களென்றும் துறவிகள் தாங்கள் செயற்பாலதாகிய தவம் செய்யார்களென்றும் தேவாலயங்களில் நடைபெற வேண்டிய நித்தியம் நைமித்திகம் விழா முதலிய சிறப்புகள் நிகழா என்றும் உயிர்கள் பசிநோயினல் வருந்துவரென்றும் நாயனர் பலவாருக மழையைச் சிறப்பித்துக் கூறியருளினர். உழவு தொழில் நடவாது எனவே அதன் சார்புபற்றிவரும் வியாபாரம் கைத்தொழில் முதலிய ஏனைய தொழில்களும் அரசியலும் நடைபெரு என்பது தானே போதரும். இவ்வாருக மக்கள் உலகவாழ்வினிடையில் அடைதற் பாலதாகிய நெறிகொள் சிற்றின்பத்திற்கும் முடிவில் அடைதற் பாலதாகிய வீட்டினை உறுவிக்கும் அருளைவளர்த்தற்கும் வேண்டிய பொருளை நன் முயற்சியாலீட்ட உதவுங் கருவி மழைதான் என்று நாயனர் இந்த இரண்டாவது அதிகாரத்தில் குறிப்பித்தருளினர்.

10. இனிக் கடவுளின் அருள் விளக்கம் உலகின் கண்ணிகழ்ந்தாலும் ஆணவ மலத்தால் மறைப்புண்டு அறியா

மையில் உழலும் மக்கள் கடவுளையும் கடவுளினருளையும் பற்றி அறிந்தாலன்றி உலகவாழ்வின் பயன் அடையார்கள். கடவுளின் அருள் தங்களிடம் பதிவப்பெற்ற பெரியோர் களே அவ்வருளை அறிவார்கள். ஆகையால் அப்பேர்ப்பட்ட பெரியோர்கள் மக்களுக்கு அறிவித்தாலன்றி அவர்கள் அறியமாட்டார்கள். ஆகையால் நாயனார் கடவுளின் அருள் விளக்கமாகிய வான்சிறப்பிற்குப்பின் மூன்றும் அதி காரமாக நீத்தார் பெருமையை வைத்துக்கூறினார். நீத்தா ராவார் இருவகைப்பற்றினையும் நீத்தமுனிவர். அல்லது பெரியார். அவர்கள் தங்களிடத்தில் கடவுளின் அருள் விளங்கப் பெற்றவர்கள். அவர்களை உரையாசிரியராகிய பரிமேலழகரும் “அறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ள வாறு உணர்த்துவார்” என்று கூறினார். நீத்தார் என்று சொல்லுதல் அமையாது நீத்தார் பெருமை யென்றது மக் கள் அவர்கள் பெருமையை யுணர்ந்தாலன்றி அவர்கள் கூறு மறைமொழிகளைக்கேட்டு அவைகளின்வழி உலகில் ஒழுகல் இயலாது என்பதைக் குறிக்கின்றது. நாயனார் முதல் இரண்டு குறளிலும் நீத்தார் பெருமை இத்தன்மைத் தென்றும், 3-வது குறளில் அவர்களை இம்மைமறுமைவகை யினைச் செவ்விதி லுணர்ந்து உலகின்கண் மக்களுக்கு அறத்தை உணர்த்துதலாகிய தொண்டு பூண்டவர்கள் என்றும், 4, 5, குறள்களில் அவர்கள் தங்கள் அறிவின் ஆற்றலால் ஐம்புலனையும் வென்றவர்கள் என்றும், 6-வது குறளில் அவர்கள் உலகில் செயற்கரிய செயல் செய்யும் பெரியாரென்றும், 7-வது குறளில் அவர்கள் தத்துவங்களை அறிந்து அவைகளின் தலை நிற்கும் தத்துவஞானிகள் என் றும், 8-வது குறளில் அவர்கள் மக்கள் அறிந்து உய்யும்படி மறைமொழிகள் சொல்லவல்ல நிறைமொழி மாந்தர் என் றும், 9-வது குறளில் அவர்கள் எல்லா நற்குணங்களையு முடையவர்கள் ஆதலின் மலைபோல் யாதொரு துலக்கமு மில்லாத தீரர் என்றும், 10-வது குறளில் அவர்கள் எல்லா உயிர்களிடத்தும் செந்தண்மை பூண்டொழுகுஞ் செம்மை

யோர் என்றும் அவர்களுடைய இலக்கணங்களைக் கூறி யருளினர்.

11. அத்தகைய நீத்தாராகிய பெரியார் உலகில் மக்கள் உய்யும் பொருட்டுக் கூறும் மறைமொழி அறமாகும். அறம் என்பது நாயனர் கட்டுரைப்படி மனமொழி மெய்களாற் செயற் பாலனவற்றைச் செய்தலும் விலக்கற் பாலனவற்றைச் செய்யாதொழிதலு மாகும். இப்படி மக்கள் செயற்பாலனவற்றைச் செய்தலும் விலக்கற்பாலனவற்றைச் செய்யாது ஒழித்தலும் எதன் பொருட்டெனின் அவர்கள் உலகில் நன்னெறியி லொழுகி மேலே குறிப்பிட்ட உலகவாழ்வின் பயன் அடைதற் பொருட்டு. மக்கள் அறத்தின் வழி யொழுகினல் அன்றி அவர்கள் உலக வாழ்வின் பயனை அடையார்கள். ஆகலின் நாயனர் பாயிரத்தில் நீத்தார் பெருமைக்குப்பின் நாலாவது அதிகாரமாக அறன் வலியுறுத்தல் என்பதை வைத்துக்கூறினர். அறமானது மக்களுக்கு உலகவாழ்வின் இடையிலடையும் பொருள் இன்பம் என்னும் இரண்டு பொருள்களையுந் தருவதுடன் முடிவில் அடையும் வீட்டினையுந் தரவல்லது. அறத்தின் வழி யொருவன் ஒழுகினல் அவனடை பொருளினையும் அதுபற்றி நெறிகொள் சிற்றின்பத்தையும் அடைந்து பின் அனுபவவுணர்வினல் பருவமடைந்த பொழுது அவ்விரண்டு பொருள்களையும் விடுத்து வீடுபேறுநாடி முயன்று வீடு அடைதல் திண்ணம். ஆகலின் நாயனர் அறன் வலியுறுத்தல் என்று சிறப்பித்துக் கூறினர். அறன் வலியுறுத்தல் என்று பாயிரத்திற் கூறலே அறம்பற்றிக் காலக்கிரமத்தில் மக்களுக்குத் திண்மையாய் உண்டாகும் ஏனைய மூன்று பொருள்களும் பருப்பொருள்களாக அடங்குவனவாகும்.

12. மேற் சொல்லியவாறு உலகவாழ்வு செவ்விதின் நடைபெற்று மக்கள் நான்கு உறுதிப் பொருள்களையும் அடைவதற்கு கடவுளும் வான்சிறப்பாகியகடவுளின் அருள் விளக்கமும் அவ்வருள் தங்களிடம் விளங்குந் தன்மையுடைய பெரியோர்களும் அப்பெரியோர்கள் கூறிய அறமும் இன்றியமையாது வேண்டப்படுதலால் நாயனர் கட

வுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலி யுறுத்தல் என்னும் நான்கையும் நான்கு அதிகாரங்களில் பாயிரமாகத் தாம் நூலில் நுவல எடுத்துக்கொண்ட நான்கு உறுதிப்பொருள்களின்பருப்பொருள்களாகக்கூறியருளினர்.

13. இனி உலகமே கடவுளின் அருள்விளக்கமாகும். அருள்விளக்கமே திருக்குறளிற் சொல்லப்படுகிறது. திருக்குறள்நூலை யியற்றிய திருவள்ளுவ நாயனர் கடவுளின் அருள் விளக்கம் அடைந்தவர். உலகின் கண்ணுள்ள எல்லா உயிர்களும் அருள் விளக்கம் அடையும் பொருட்டு அவர் இந்நூலை யியற்றியருளினர். திருக்குறள் நூலில் ஒவ்வொருபாலிலும் ஒவ்வொரு அதிகாரத்திலும் ஒவ்வொரு பாவிலும் கூறப்படுவது அருள் விளக்கமே. இப்படித் திருவள்ளுவர் கூறும் அருள் விளக்கம் இறைவன் அருளைத் துணையாகக் கொண்டு நுண்ணறிவால் நுனிந்து நோக்கும் புலவர்க்கேயன்றி ஏனையோர்க்குப் புலப்படாது. எல்லா மக்களும் இந்நூலைக்கற்று தங்கள் அறிவின் வன்மைக் கேற்ப உணர்ந்து உய்தல் வேண்டுமென்றும் விரிந்தபெருங் கருணை நோக்குடன் நூலியற்றிய திருவள்ளுவ நாயனர் நூலினுள் நுணுகி விளங்கும் கடவுளின் அருளை யாவரும் எளிதில் அறியும் பொருட்டு, ஆலய அமைப்பில் உள்ளே புறக்கண்ணால் நுணுகி நோக்குவார்க்கு விளங்கும் சிவலிங்கப்பெருமானை வெளியே ஆலய முகப்பில் தூரத்தே காணுவார்க்கும் வெளிப்படையாய்க் காணும் கோபுரம் காட்டுவதுபோலப் பாயிரத்தில் தூலமாக அமைத்தனர். கடவுள் வேறு அவனுடைய அருள்வேறு அல்ல. மழை கடவுளின் அருள் வெளிப்பாடு என்று யாவரும் உலக அநுபவத்தில் அறிவார்கள். நீத்தார் ஆகிய பெரியோர்கள் கடவுளின் அருள் விளக்கம் அடைந்தவர்கள் என்றும், அறமானது கடவுளின் அருளை விளக்கும் நெறியென்றும் யாவரும் எளிதில் அறிந்து கொள்ளலாம். இவ்வாறு திருக்குறள் நூல் கடவுளின் அருள் விளக்க நூல் என்று யாவரும் உணர்ந்து ஓதியுய்தற் பொருட்டு திருவள்ளுவ நாயனர் நூல் முகப்பில் நான்கு பாயிர அதிகாரங்களையும் வைத்தனர் என்க. மா. வே. நெல்லையப்ப பிள்ளை. சிந்துபூந்துறை.

---

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.

யிருக்கிறார்கள். அதுவிஷயமாகத்தான் என்னை அனுப்பினார்கள்."

தனபாலசெட்டி:—" உம். எனக்கு இருப்பது ஒரே பெண்குழந்தை. அதைத் தவிர வேறு ஆண் குழந்தைகளும் கிடையாது. அந்த ஒரு பெண்ணையும் அவ்வளவுதூரங் கடந்து கொடுப்பதைப்பற்றித்தான் யோசனையாயிருக்கிறது. மேலும், என் குழந்தைக்கு புருஷனாக வருகிறவன்தான் என்னுடைய பூஸ்திதிகளுக்கும் உரியவனாயிருப்பான். நடராஜ செட்டியாருக்கும் இருப்பது ஒரே பையன்; அதிக சொத்துடையவர்கள்தான். ஆகையினால் அவர்களும் தங்கள் பையனை எங்களுடனிருக்கச் சம்மதிக்கமாட்டார்கள். குழந்தையும் எங்களைவிட்டுப் பிரிய இஷ்டப்படமாட்டாளென்றே தோன்றுகிறது."

நாராயணசெட்டி:—" இதெல்லாம் முதலில் அப்படித்தானிருக்கும்; பின் வரவரச் சரியாய்விடும்."

தனபாலசெட்டி:—" உம். நல்ல சம்பந்தந்தான். நான் சம்மதித்தாலும் குழந்தையின் தாய் என்ன சொல்லுவாளோ? கொஞ்சமிருங்கள், இதோ வருகிறேன்."

என்று உள்ளேபோய் தன் மனைவி சிவகாமியம்மாளைக் கூப்பிட்டார். அவள், " இதோ வருகிறேன்" என்று வந்தாள்.

தனபாலசெட்டி:—" சிவகாமி! நாம் முன்னால் மதுரைக்குப் போயிருந்த பொழுது நமக்கு நிரம்ப உபசாரங்கள் செய்தாரல்லவா நடராஜ செட்டியார்? அவர் இப்பொழுது, தன் மகனுக்கு நம் வள்ளிநாயகி

யைக் கேட்கும்படிக்கு தன் மைத்துனனை அனுப்பி யிருக்கிறார். எனக்கு ஒருவிதமா யிருக்கிறது. நமக்கும் ஒரே குழந்தை. அவர்களுக்கும் ஒரே பையன். அவர்களும் மிகுந்த சொத்துடையவர்கள். ஆதலின் அவர்கள் பையன் நம்முடனிருக்கவும் பிரியப்பட மாட்டார்கள். நமக்கும் நம் குழந்தையைப் பிரிந்திருக்கமுடியாது. கேட்டனுப்பிவிட்டார். என்ன செய்வது?''

சிவகாமி அம்மாள்:—"கேட்டனுப்பிவிட்டாரென்றால் முடியுமா? நமக்கு நாலைந்து குழந்தைகளிருந்தாலும், கேட்டதற்காக ஒரு பெண் கொடுக்கலாம். இந்த ஒரு குழந்தையையும் அரைமாத வழிக்கங்கே கொடுப்பதென்றால் நான் சம்மதிக்க மாட்டேன். நாமென்ன சிரஞ்சீவிகளா? ஒரு சமயத்தில் நமக்கொன்றென்றால் அதற்கு தூது போய்ச் சேர ஒரு பதினைந்து நாளாகும். அங்கிருந்து அவர்கள் புறப்பட்டு வந்து சேர அரை மாதம். ஆக, மாதக் கணக்கில் ஒன்று ஒன்றரை யாகிவிடும். இதற்குள் இங்கிருப்பவர்கள் சங்கதி எப்படி யெப்படியோ? என் குழந்தையைப் பிரிந்திருக்க என்னால் முடியவே முடியாது. மேலும் குழந்தை ஆயிரங் காலத்துப் பயிர். இரண்டு நாட் பழக்கத்திற்குள் பெண்ணைக் கொடுத்து விடுவதென்றால் நன்றாயிருக்கிறதா? அவர்களெப்படியோ? பையன் குணந்தானெப்படியோ? ஒத்தைக் கொருபிள்ளை. இல்லாத செல்லமாய் வளர்ந்திருக்கும். அதனால் பையன் நல்லவனாக யில்லாவிட்டால் ஒருகஷ்டமுமறியாத நம் குழந்தை

துன்பப்படவா? கட்டிக் கொடுக்கு முன் எவ்வளவோ யோசிக்கவேண்டும். நாமென்ன பொம்மைக் கல்யாணமா செய்யப் போகிறோம்? பலர், பெண் தங்களை விட்டுப்போனால் போதுமென்று எண்ணுகிறார்கள். ஒரு உயிரையன்றோ ஒருவனிடத்தில் ஒப்புவிக்க வேண்டியதாயிருக்கிறது. எவ்வளவோ நல்லவர்களும், இரக்க முள்ளவர்களும் கூடத் தம்முடைய மனைவியிடத்தில் அதிக கடூரமுள்ளவர்களா யிருக்கிறார்கள். சிலர், இஷ்டமில்லாத மாப்பிள்ளைகளுக்கு இஷ்டமில்லாத பெண்களைக் கட்டாயப்படுத்திச் செய்துவைக்கிறார்கள். அவர்களுக்கென்ன? நாளை வாழப் போகிறவர்கள் அவர்களா? மாப்பிள்ளையும் பெண்ணுமல்லவா? பலாறியக் கட்டின தாலிக்காக புருஷன் பெண்ஜாதி போலிருந்து கொள்கிறார்கள். இதிலிருந்து தான் முக்கியமாய் பரஸ்திரீ கமனமும், பரபுருஷ கமனமுமுண்டாகிறது. அவர்களுக்குள்ளேயே ஒருவர்மே லொருவர் பற்றுள்ளவர்களா யிருந்தால் இந்த மாதிரிக்கெல்லாம்வராது. பணத்தைப்பற்றி நமக்கென்ன? இன்று பணக்காரன் நாளை ஒட்டாண்டியாகிறான். இன்று ஒட்டாண்டி நாளை கோடீசுவரனாகிறான். ஆகையினால் அவர்களுக்குப் பணமிருக்கிறதென்று அவ்வளவு தூரம் கடந்து கொடுப்பது பலவிதத்திலும் பொருத்தமாக இல்லை. மேலும், அவர்கள் பையனுக்கும் தக்க வயதாகிவிட்டது. அவ்வூரிலேயே இதுவரை ஒரு பெண்ணை விரும்பியிருந்தால், இதெல்லாம் வீண் கஷ்டம்.''

தனபால செட்டி:—"ஆளனுப்பிவிட்டார். அரை

மாத வழி கடந்து அவரும் வந்திருக்கிறார். இன்னும் அரைமாத வழிகடந்து 'இல்லை' யென்று சொன்னால் நன்றாயிருக்காதென்று தான் நினைக்கிறேன்."

சிவகாமி அம்மாள் :—"இந்தக் காரியத்திற்கு இல்லை யென்று சொல்லப்பயப்பட்டால் முடியுமா? ஆடு, மாடு, குதிரை கூட எவ்வளவோ சிநேகிதரா யிருந்தாலும் விலைவாங்காமற் கொடுக்கிறதில்லை. விலை குறைத்துக் கேட்டாலும், 'இல்லை, மன்னித்துக் கொள்ளுங்கள். விலை அதிகம் குறைந்து விட்டது' என்று சொல்லிவிடுகிறார்கள். அப்படி யிருக்க, நாமாக நமது சொத்துச் சுகத்துடன் நம்முடைய சொந்தக் குழந்தையைக் கொடுக்க இஷ்டப்படாவிட்டால் குற்றமாகுமா? சிநேகத்திற்கும் இதற்கும் என்ன சம்பந்தமிருக்கிறது? இதையெல்லாம் குற்றமாகக் கொண்டால் அப்படிப்பட்டவர்களின் சிநேகம் தான் எதற்கு?"

தனபால செட்டி :—"நீ சொல்லுவதும் சரி தான். குழந்தையைப் பிரிந்திருக்கவே முதற் காரியம் நம்மால் முடியாதே. சொல்லியனுப்பிவிட வேண்டியதுதான். அவருக்கும் சேர்த்துச் சமையலாகட்டும்."

சிவகாமி அம்மாள் :—"சேர்த்தேன் சமையலாக வேண்டும்? எப்பொழுதுமே பத்துப் பேருக்கு மிஞ்சும்படியாகத் தானே சமையல் செய்கிறோம்."

என்று சொல்லவும் செட்டியார் வெளியேவர, நாராயண செட்டியார் எழுந்து, "எல்லாம் நல்ல காரியமாகத் தானிருக்கும்." எனவே தனபால செட்டியா

ருக்குச் சங்கதியைச் சொல்ல நாவெழவில்லை. எனினும் மனதை ஒருவிதமாகத் திடப்படுத்திக் கொண்டு அவரை உட்காரச் சொல்லித்தானும் உட்கார்ந்தார்.

தனபால செட்டி :—“ உம்.....நடராஜ செட்டியாரவர்கள் நல்லவர்கள்தான். என்றாலும் பிராப்தமில்லை போலிருக்கிறது. குழந்தையின் தாயாருக்குக் கொடுக்கவும் சம்மதந்தான். என்றாலுந் தூரம் கடந்து சம்பந்தஞ் செய்வதென்றால் வருத்தப்படுகிறாள். தூரம் அதிகமாய்ப் போய்விட்டது பாருங்கள் !”

நாராயண செட்டி:—“ இதெல்லாம் ஒரு தூரமா? எப்பொழுது பெண்ணொன்று பிறந்ததோ அப்பொழுதே அது ஊருக்குப் பிறந்ததென்று நினைத்துக்கொள்ள வேண்டியதுதானே. பிள்ளை வீட்டாரும் பிள்ளையைப் பிரிந்திருக்கக் கூடியவர்களல்ல. ஆனால் ஒன்று செய்யலாம். இருவரும் ஆறுமாத மிங்கேயும் ஆறுமாத மங்கேயுமாக இருக்கட்டும். அதற்காக பிள்ளை வீட்டாரிடம் கட்டாயப்படுத்தி ஏற்பாடு செய்துவிடுகிறேன். நாமென்ன பிறக்கும்பொழுதே குழந்தை குட்டிகளோடா பிறக்கிறோம் ? இடையில் வந்து அதனாலுண்டான ஆசைதானே. அதிலும் பெண் குழந்தைமேல் ஆசைவைத்தால் முடியுமா ?”

செட்டியார் மறுபடியும் தன் பெண்சாதியிடம் வந்து நாராயண செட்டியார் சொன்னவற்றைச் சொன்னார்.

சிவகாமி அம்மாள் :—“ இதென்ன ? இப்படி மனம்புரண்டால் என்னதான் செய்வது ? இங்கிருந்து அங்கும் அங்கிருந்து இங்கும் பயணத்திலேயே

இரண்டு மாதங்கள் பாய்ந்துவிடும். வருஷம் பூராவும் பயணத்திலேயே இருந்தால் ஒவ்வொரு சமயத்தி லும் தொந்தரவில்லாமல் வந்து சேரமுடியுமா? வழி யெல்லாம் திருடர் பயம். எவ்வளவு காடாந்தரமான இடங்களிருக்கின்றன?''

தனபால செட்டி :—"இதுவும் சரிதான். குழந் தையை விட்டுப் பிரிய மனம் வராததுதான்.''

என்று சொல்லி நாராயண செட்டியாரிடம் வந்து, "தூர சம்பந்தம் முடியவே முடியாதென்று சாதிக் கிறாள். பிள்ளையை எங்களோடே நிறுத்துவதானால் மட்டும். திருப்தியாய்க் கல்யாணம் செய்துவைக் கிறோம். அல்லது தயவுசெய்து வேறிடத்தில் பார்த் துக் கொள்ளுங்கள். நடராஜ செட்டியார் பையனுக் குப் பெண் கிடைப்பதா கஷ்டம்? பெண்தானே வேண்டும். எங்கெடுத்தாலென்ன?'' என்றார்.

நாராயண செட்டி :—பிள்ளை வீட்டார் பிள் ளையை சதா காலமும் இங்கு நிறுத்தச் சம்மதப்பட மாட்டார்கள். பின் தங்களிஷ்டம். தங்களுக்கு இஷ்ட மில்லாத பக்ஷத்தில் அப்பேச்சை விட்டுவிட வேண்டி யதுதான்."

தனபாலசெட்டி :—" 'இஷ்டமில்லாத பக்ஷத் தில்' என்று சொல்லக்கூடாது; சந்தர்ப்பமும், மற் றும் காரியங்களும் சௌகரியமாயில்லை."

நாராயணசெட்டி :—"நல்லது. எல்லோரும் கட வுள் கிருபையினால் தீர்க்காயுசும் சர்வசம்பத்தும் உடையவர்களாயிருக்க வேண்டும். எனக்கு உத்தரவு கொடுக்கின்றீர்களா? போய் வருகிறேன்."

தனபாலசெட்டி :—“ தாங்கள் வந்தவுடனே புறப்படுவதைப் பார்த்தால் தாங்கள் வந்த காரியத்தை முடித்து வைக்கவில்லையென்ற கோபத்தால் செய்வதாகத் தெரிகிறது. சரியென்று சொல்லியிருந்தால் இங்குதானே தங்குவீர்கள்? காரியம் அப்படிப் பட்டதாயிருக்கிறது. தாங்கள் உடனே போவது திருப்தியாயில்லை. அதற்குமேல் தங்களிஷ்டம்.”

நாராயண செட்டியார் உடனே தனபாலசெட்டியாரை விட்டுப் போகப் பிரியப்பட்டவரா யிருந்தும், தனபாலசெட்டியார் வருத்தப்படுகிறாரே என நினைத்து, “ நான் ஊருக்குப் போக வழியனுப்ப வில்லை. இங்கே என் பந்துக்களில் ஒருவருண்டு. அவரைப்பார்த்து வரவே புறப்பட்டேன். தாங்கள் எனக்குச் சாப்பாடு போடாவிட்டாலும் தங்கள் வீட்டில் இரண்டு நாட்களிருந்து தான் போவேன்?” என்றார்.

நாராயணசெட்டியார் இரண்டு நாட்களிருந்து அதற்குள் தனபாலசெட்டியாரின் மனதை மாற்ற எவ்வளவோ பிரயாசைப்பட்டும் முடியவில்லை. சிவகாமியம்மாளிடம் குண்டு பலிக்கவில்லை.

---

## நான்காம் அத்தியாயம்.

### செட்டியாரே சம்மதந்தானா?

இளவரசரின் தந்தை, பாண்டிய மஹாராஜா திருச்செந்தூருக்கு வந்து இரண்டு தினங்களாகிவிட்டன. மூன்றாவதுநாள் மாலையில் இராஜாவிடம் ஒரு காவலன் வந்து, “மஹாராஜா! நமது சின்ன மஹா

ராஜாவின் தோழராம். பேர் அனந்தராமன் என்று சொன்னார். ஐயர் போலிருக்கிறது; அவர், சின்ன மஹாராஜாவின் விஷயமாய் தங்களிடம் ஏதோ சங்கதிகள் பேசவேண்டுமாம். உத்தரவானால் அழைத்து வருகிறேன்" என்றான்.

மஹாராஜா:—"அனந்தராமனா? அழைத்துவா."

என, காவலன் நமது நண்பன் அனந்தராமனை அழைத்துவந்து முன்விட்டுச் சென்றான். அனந்தராமன், மஹாராஜாவை நமஸ்காரம் செய்ய மஹாராஜா, நமஸ்காரத்தை அங்கீகாரம் செய்து, "அனந்தராமா! அதென்ன உன் நேசனைப்பற்றி? அவன் இப்பொழுது, முன்போல் அவ்வளவு சந்தோஷமாயில்லையே; இரவு முழுதும் படுக்கையில் தூக்கமில்லாமல் உருண்டு கொண்டே யிருக்கிறானும். அரண்மனை வைத்தியர், அவன் உடம்பில் யாதொரு வித்தியாசமுமில்லை என்று சொல்லுகிறார். ஆனாலவன் அதிகமாக மெலிந்துவிட்டான். கேட்டால் ஒன்றுமில்லை என்கிறான்." என்று கேட்டார்.

அனந்தராமன்:—"நானும் அதைப்பற்றியே தங்களிடம் சொல்லவந்தேன். அவரிஷ்டப்படி ஒருகாரியம் செய்யாவிட்டால், இன்னும் கொஞ்ச காலத்தில் அவரையிழக்க நேரிடும் போலிருக்கிறது."

மஹாராஜா:—"அப்படியா? என்னதான் காரணம்?"

அனந்தராமன்.—"அவர், இவ்வூர் தனிகரான தனபால செட்டியாரின் பெண்மேல் காதல் கொண்

டிருக்கிறார். அவளை மணம் புரிந்தாலொழிய மனம் கரைதலொழியார் போல் காண்கிறது.''

மஹாராஜா:—"இருவரும் நேரில் சந்தித்துப் பேசுவதுண்டோ ?''

அனந்தராமன்:—"அகஸ்மாத்தாக, ஒரு ஆபத்துக் காலத்திலன்றி மற்றப்படியில்லை.''

மஹாராஜா :—"இதுவரை இராஜவம்ஸத்தில் இப்படிக் கல்யாணம் செய்யும் வழக்கமில்லையே ; இராஜவம்சத்தைத் தவிர, சொந்த ஜாதியிலுங்கூட சாதாரண குடும்பங்களில் கல்யாணம் செய்யும் வழக்கம் ஏற்பட்டதில்லை. சீக்கிரமாய் இராஜவம்சத்திலேயே ஒரு நல்ல கன்னிகையைத் தேடிக் கல்யாணம் செய்துவைப்போம்.''

அனந்தராமன்:—"தங்களிஷ்டம். ஆனால், அவளை அடையாவிடின் தான் வாழ்வதில் பயனில்லையென்றும், அவளையன்றி வேறு பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வதில்லையென்றும் உறுதியாகச்சொல்லுகிறார். தாங்கள் சீக்கிரத்தில் வரப்போகிறதாகத் தெரிந்தவுடன் அவர் மனதைத் தேற்றி நானே தங்களிடம் நேரில் சொல்வதாக ஒப்புக்கொண்டேன்.''

மஹாராஜா:—"மதுரையில் மிக்க செல்வந்தனான நடராஜ செட்டியின் மகனுக்கு, தனபால செட்டியின் மகளை விவாகம் செய்துகொடுக்கும்படி கேட்பதற்காக, திருச்செந்தூருக்குப் போவதற்கு தனக்கு இரண்டு மாத விடுமுறை வேண்டுமென்று அரண்மனை முக்கியகாரியஸ்தனான நாராயணசெட்டி கேட்டான். உத்தரவும் கொடுக்கப்பட்டது. நேற்று இங்கு என்

ளைப்பார்க்க வந்தான். தனபாலசெட்டி, தூரத்திற் பெண்கொடுக்க இஷ்டமில்லையென்று சொல்லிவிட்டாராம். ஆக, செட்டியின் கருத்தை இப்பொழுதுதான் அறிந்தேன். இல்லையென்றால் அவ்வளவு பெருத்த தனவந்தன் வீட்டுவானைத் தள்ளமாட்டார். இந்த எண்ணங்கொண்டுதான் அப்படிச்சொல்லி யிருக்க வேண்டும்."

அனந்தராமன் :—"ஒருவேளை மஹாராஜா அவர்களின் எண்ணந் தவறாயிருக்கலாமென்று நினைக்கிறேன். ஏனென்றால், சின்னமஹாராஜா இக்கருத்தை என்னையன்றி வேறெவர்க்கும் வெளியிட்டவரல்ல. வெளியிடக்கூடியவருமல்ல. நான் அவருக்கு எவ்வளவோ அத்தியந்த நேசனாயிருந்துங்கூட என்னிடம் அவர் வலியச் சொல்லவுமில்லை. அவர் முகவாட்டத்தைக் கவனித்து எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக்கொண்டதனால் அரிதிற் சொன்னார்."

மஹாராஜா :—" அவன் எத்தனை நாட்களாய் இந்த எண்ணங் கொண்டிருக்கிறான் ?"

அனந்தராமன்:—" இன்று ஒன்பதுநாட்களாகின்றன. அதாவது பத்தாந்திருநாள் சாயுங்காலமுதல்." (என்று, பின் பத்தாம் திருநாள் சாயுங்காலம் நடந்த யாவற்றையும் சொன்னான்.)

விகடன் :—" மஹாராஜா அவர்கள் ஒரு காரியம் கவனிக்கவேண்டும். இந்த ஐயர் முழுப் பொய்யர். சின்னமஹாராஜா, இவருக்காகத்தான் மனதுடன் யுத்தம் செய்யப் போவதாகச் சொன்னார்கள். ஆகையினால்தான் சின்னமஹாராஜா மனதுடன் யுத்தம்

செய்து இப்படி மெலிந்திருப்பார்கள். நானும் ஒரு நாள் என்வயிற்றுடன் சண்டைபோட்டுச் சாப்பிடாம லிருந்தேன். பின் அதனுல் ரொம்பத் தொந்தாவு. பஹு தொந்தரவு. நான் கழிச்சலிலேபோக ரொம்பக் கஷ்டம் மஹாராஜா, இந்த ஐயருக்காகமனதுடன் சண் டை போட்டுநன்ருய்ச் சாப்பிடாமலிருந்தாலு மிருக்க லாம்."

மஹாராஜா :—"அதென்ன சங்கதி, அனந்த ராமா ?"

விகடன் :—" உம். அப்படிங்கேளுங்கோ. அப் பன்ணு சங்கதி வெளிக்குவரும். ம்ம்ஹ்ம்! வரட்டும் சங்கதி!"

அனந்தராமன் :—" வேறென்றுமில்லை..."

விகடன் :—"என்ன ஐயா இது ? வேறென்று மில்லாமலா மரம் முளைத்து, பூத்து நிற்க அந்த பூக் களை கன்மசண்டாளனுகிய மன்மதன் பறித்து எய்து விட்டான் ?"

அனந்தராமன்:—(சிரித்துக்கொண்டு)"சின்ன..."

விகடன் :— "என்னுங்காணும் ! சிரித்துக் கொண்டு 'சின்ன....' என்று சொல்லுகிறீர் ? நீர் சிரிக் கிறதை சின்னப்பிள்ளைகள் கண்டால், தேங்காய் கீத் தென்று உம்மைக்கேட்டு அழப்போகின்றன. சிறு பெண்கள் கண்டால் முல்லைப்புஷ்பக்கொத்தென்று எட்டிப் பிடித்துக்கொள்ளும்."

அனந்தராமன் :—சின்னமஹாராஜா அவர்கள் அதிக வருத்தத்துடனிருப்பதைக்கண்டு, காரியம் முடியும்வரை வருத்தப்பட வேண்டாமென்று கேட்

டுக்கொண்டேன். அதன்மேல் அவர், எனக்காகத் தன் மனதுடன் யுத்தஞ் செய்வதாகச் சொன்னார்."

விகடன் :—"நீர் சொல்லுகிறபடி, காரியம் முடிந்த பின்னர் கடுந்துயரப்படும்படி கேட்டுக்கொண்டீர்போ லிருக்கிறது. நல்லதையா! அனந்தையா! ரொம்ப நல்லது. பஹூ நல்லது."

மஹாராஜா :—"விகடா! பேசாமலிரு. உன் பேச்சுகளெல்லாம் பிறகு பார்க்கலாம்."

விகடன் :—"சின்ன மஹாராஜாவின் கல்யாணத்தின் பொழுதா?"

மஹாராஜா :—"சும்மாவிரு. அதிகப் பிரசங்கித்தனம் செய்யாதே."

விகடன் :—"ஆ! புத்தி! புத்தி! (தனக்குள்) இது ஒரு மைசூர்க் கத்தி."

மஹாராஜா :—"அனந்தராமா! இந்த ஒன்பது நாட்களுக்குள்ளாகவா சுப்ரமண்யன் இவ்வளவு மெலிந்திருக்கிறான்?"

அனந்தராமன் :—"ஆம், மஹாராஜா!"

விகடன் :—"மகாராஜா! ஒரு சின்ன சங்கதிக்கு உத்தரவு கொடுக்கவேண்டும்: எனக்கு ஒரு பழமொழி ஞாபகத்திற்கு வருகிறது; என்னென்ன, 'இளைத்தவன் இரும்பைத் தின்னு' என்பதே. ஆனால் சின்ன மஹாராஜா அவர்களுக்கு, தின்ன பல்லு பல மிருக்குமோ என்னமோ! மேலும் இன்னொன்று செய்யலாம்; ஒரு பெரிய தீக்கோழியைக் கொண்டுவந்து, அதற்கு இரும்புத் துண்டுகளைத் தின்னக் கொடுத்து பின் அதைச் சாப்பிடலாம். ஆனால் தீக்கோழியைச்-

சாப்பிடமாட்டார்களென்பதும் எனக்குத் தெரியும்."

மஹாராஜா :—"விகடா! என்ன இது? சும்மா விருக்க மாட்டாயா?"

விகடன் :—"இல்லை; இல்லை. புத்தி புத்தி. எனக்கு புத்தி வந்துவிட்டது."

மஹாராஜா :—"விகடா! நீ போய் சுப்ரமண்யனை நான் சொன்னதா யழைத்துவா."

விகடன்:—"உத்தரவு. இதோ!" (போகிறான்.)

மஹாராஜா :—"அனந்தராமா! நீ இதைப்பற்றி என்ன நினைக்கிறாய்?"

அனந்தராமன் :—"வேறு ஏதேனும் வழிகளிருந்து இளவரசரும் உடன்படத்தக்கதா யிருந்தால், நானிதை தங்கள் காதிற்குவரும்படி செய்திருக்கவே மாட்டேன். ஏனென்றால், இந்தச் சம்பந்தம் நடந்தால் இதனால் எவ்வளவோ தொந்தரவுகளுண்டாகுமென்று நான் முன்னதாகவே யோசித்தேன்."

மஹாராஜா:—"அவனிருக்கும் ஸ்திதியைப்பார்த்தால், இந்த விஷயத்தில் அவனிஷ்டத்திற்கு மாறு பேசுவது நல்லதல்ல. நம்மைப் போன்ற அரசர்கள் வசைகூற இடமில்லாதிருத்தல் வேண்டுமே என்பதும், வைசியப் பெண்ணின் புத்திரன் வாரிசாக ஏற்படக் கூடியதுமே அவசியம் கவனிக்க வேண்டியதாயிருக்கிறது."

அனந்தராமன் :—"மஹாராஜா! தங்களுக்குத் தெரியாத காரியமல்ல, நான் சொல்லப் போகிறது, இளவரசரிருக்கும் நிலைமைக்கு அதையெல்லாம் கவ

வித்தால் முடியாதுபோல் தோன்றுகிறது. தங்களிடம் இந்த விவாகத்தைப்பற்றிச் சொல்ல நினைத்த போதே, தாங்கள் கோபப்படுவீர்களென்றும் நினைத்தேன். அவர் தேக மிருக்கும் நிலைமையைக் கவனிக்க, சொல்லாமற்போனல் அதே பெரிய ஆபத்து என்று நினைத்தே தங்களிடம் சொல்லத் துணிந்தேன்."

மஹாராஜா:—"யாருக்குத் தானிது சம்மத மிருக்கும்? அவன் நிலைமையை யோசித்து, நாம் சம்மதிக்காவிடின் அவன் கட்டாயம் உயிர்விடுவானென்றே மௌனமாயிருக்க வேண்டியதாயிருக்கிறது."

அனந்தராமன்:—"நானும், இளவரசரும், ஒருவரிறந்தால் மற்றவர் அதற்குப் பின் உயிர் வாழ்வதில்லை யென்ற உறுதி சிறுவயது முதலே கொண்டிருக்கிறோம். ஆகையினல் அவருக்கு மோச மேதேனும் வருவதாயிருந்தால் என்னுலுமிருக்க முடியாது."

மஹாராஜா:—"ஒரு கல்யாணம் நடக்காமற் போயின், அதனல் இருவரிறக்க வேண்டுமா? இவை யெல்லாம் எதற்கு? யோசித்துக் கொள்வோம்."

என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது இளவரசனும் விகடனும் உள்ளே வந்தார்கள்.

மஹாராஜா:—"குழந்தாய்! இப்படிவா; நீ எப்பொழுது மில்லாதவாறு, கொஞ்சமேனும் சந்தோஷமே யில்லாமல் இப்படி யிருந்தால் உன் உடம்பு எதற்காகும்? நீ இப்படியிருப்பது சரியா? உன் அன்னை உனக்கு சீக்கிரம் கல்யாணம் செய்து பார்க்க

வேண்டுமென்று, இன்றுகாலே தெரிவித்தாள். எனது விருப்பமும் அதுவே. விகடா! நீ சென்று கல்யாண மாகாத இராஜ கன்னியர்களின் படங்களே யெல்லாம் எடுத்துக் கொண்டுவா."

என, விகடன் எடுத்துக்கொண்டு கொடுத்தான். மஹாராஜா அவைகளே சுப்பிரமணியன் கையிற் கொடுத்து, "இவற்றுள் உனக்கு இஷ்டமான பெண் ணேச் சொன்னுல் அப்பெண்ணின் தந்தைக்கு தூது போக்குவோம்" என்ருர். இளவாசன் அவற்றை வாங்கிக் கையில் வைத்துக் கொண்டு ஒன்றையும் பார்க்காமல் ஒருவிதமான பார்வையாய்த் தன் தந்தை யையும் தோழனேயும் பார்த்தான். ஹா! அந்தப் பார் வையில் எத்தனே அர்த்தங்கள் பொருந்தி யிருந்தன! அப்பார்வையைக் கண்ணுறவே அரசரின் மனம் கரைந்து விட்டது. எனினும் அதை வெளிக்குக் காட்டாது, "உனக்கு என் முன்னிலேயில் வைத்துப் பார்ப்பது இஷ்டமில்லா திருக்கலாம். ஆகையினுல் வெளியே கொண்டுபோய் உனக்கு இஷ்டமானதை அனந்தராமனிடத்திற் கொடுத்தனுப்பு" என்னவே, நண்பரிருவரும் வெளியே சென்றனர்.

விகடன்:—"மஹாராஜாவிற்குப் பிரியமானுல் ஒருவார்த்தை சொல்லுகிறேன். சின்ன மஹாராஜா வின் பார்வையில் எத்தனேயோ அர்த்தங்கள் கிளம்பு கின்றன. இந்தக் கல்யாணம் முடிவதற்கான வேலே களேப் பார்ப்பதே, இனி இம்மாதிரிப் பார்வைகள் பார்க்காமலிருப்பதற்கு மருந்து."

மஹாராஜா:—"ஆம், அவன் பரிதாபகர முகத்

தையே நம்மால் பார்க்க முடியவில்லையே. அவன் எவ்வளவு மனச் சங்கடமடைந்திருக்கின்றானோ? வித்யா சாகரரை அழைத்துவர ஓர் ஆளனுப்பு."

* * * * *

அன்றிரவு வித்தியா சாகரராகிய முதன் மந்திரியும் தனபால செட்டியாரும், தனபால செட்டியாரின் வீட்டில் கீழ்க்கண்டவாறு பேசிக்கொண் டிருந்தார்கள். விகடனும் சமீபத்திலிருந்தான்.

தனபாலசெட்டி:—"நமது மஹாராஜா அவர்கள் எப்பொழுது புறப்படுவார்கள்?"

வித்தியாசாகரர்:—"நமது இளவரசருக்கு கல்யாணம் முடித்துவைத்தே புறப்படுவார்கள்"

தனபாலசெட்டி:—"நமது இளவரசருக்கு விவாஹமா? எப்பொழுது? தாங்கள் சொல்லுவதைப் பார்த்தால் இந்த ஊரில் வைத்துத்தானே முடியும் போலிருக்கிறது! சமீபத்திலிருக்குமோ?"

விகடன்:—"என்னிடத்தில் இந்தக் கேள்வியை யாராவது கேட்டால், முன்னாற் சொன்னதை பின்னால் மறந்தே போயிருப்பேன். கேள்வி ரொம்ப நீளமல்லவா?"

வித்தியாசாகரர்:—"கல்யாணம் இவ்வூரிலேயே சீக்கிரம் முடிவதாயிருக்கும்."

தனபாலசெட்டி:—"எந்த ஊர் அரசன் மகளை வதுவை செய்து வைப்பதாகத் தீர்மானித் திருக்கிறது?"

வித்தியாசாகரர்:—"இதன் விஷயமாகவே தங்களிடம் வந்தேன். தங்கள் முடிவிற்குப் பின்னரே